*Ūḻiyaṉ*

*Malar 19, itaḻ 26*

*December 28, 1939*

Record no. 148

REG. NO. M. 3888

12 பக்கங்கள்

விலை அரை அணா

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
நிரந்தர விளம்பரம் அங். 1-க்கு 1—0—0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மனேஜருக்கு எழுதவும்

(தேசிய வாரப் பத்திரிகை)

வியாழன்தோறும் வெளிவருவது

மலர் 19 | காரைக்குடி, பிரமாதி௵ மார்கழி௴ 13௳ வியாழன் (28—12—1939) | இதழ் 26

## சப்மரினைப்பற்றிச் சகலமும்

★

நிலத்தில் நடக்கும் இராணுவப் போர் இன்னும் மும்முரமாக மூளவில்லை. மேற்குப் போர்முனையில் அமைதியே நிலவுகிறது. பின்லாந்தின் தரையிலே பனிக்கட்டி மூடிக்கொண்டதால், ருஷ்யர்கள் நின்று யுத்தம் புரியமாட்டாமல் தடுமாறுகின்றார்கள். தரைச் சண்டை நன்றாயில்லை!

வானப் போர் என்பது விமானப் போர்தான். எதிரியின் விமானம் தானுய்ப் பழுதுபட்டாலும் அல்லது பழுதாய்ப் போகும்படி செய்யப்பட்டாலும் அரைவிநாடியில் விமானத்துடன் வீழ்ந்து மடிந்துவிடுகிறான். விமானப் போரில் வேடிக்கையில்லை. வானளாவப் பறக்கலாம்; நம் வீட்டு மேல் மாடியைத் தொட்டு உராய்ந்துகொண்டே பறக்கலாம்; ஆயிரங்குண்டுகளை வீசலாம், திடீரென்று விமானம் நொறுங்கி நம் தலைமேலும் விழலாம். எனவே விமானச் சண்டை நம் கண்முன் தலைக்கு மேல் நடந்தாலன்றி சுவாரஸ்ய மூட்டாது.

ஆனால் கடற்போர் மிக வேடிக்கையானது. ஒரே குண்டில் லட்சக்கணக்கான பவுன் செலவில் கட்டப் பெற்ற ஒரு ராயல் ஓக் அல்லது கிராப்ஸ்பீ மூழ்கடிக்கப்படுவதை சுவாரஸ்யமாய் கேட்கலாம். அதே மூச்சில் அக்கப்பலுடன் அதிலுள்ள ஆயிரக் கணக்கானவர்கள் மூழ்கிச் சாவதையும் கேட்டு வருத்தப்படலாம்!

### கடலிலுள்ள அபாயம்

நடுச்சமுத்திரத்தில், நாற்புறங்களிலும் மேலேயும் கீழேயும் மரணம் ஒன்றே சூழ்ந்து கொண்டிருக்கிறது. தரையில் போர் நடக்கும் போது நம் காலடியிலிருந்து அபாயம் நேரிடுவதற்கில்லை. ஆனால் சமுத்திரத்தில் கப்பற்சண்டை நடக்கிறதென்றால் சாதாரணமல்ல. மேலே, விமானங்கள் கூட்டம் கூட்டமாயிருந்துகொண்டு குண்டுகளைப் பொழியலாம். சற்று ஏமாந்தால், அவ்விமானங்கள் நேரே நம் தலையைக் கூடகொத்திக் குத்தவரும். எதிரிலுள்ள கப்பல் பீரங்கிப் பிரயோகம் செய்கிற அதேசமயம் இருபுறங்களிலும் டார்பிடோர்க்கள் குண்டுகளைப் பொழியக் கூடும். இவைகளைச் சமாளித்துக் கொண்டு எதிர்த்து நின்றாலும், அடியிலிருந்து ஒரு நீர்மூழ்கிக்கப்பல் சாதுபோல சத்தமிடாமல் வந்து ஒரு குண்டைப்போட்டுவிட்டுத் திரும்பிக் கூடப்பார்க்காமல் போய்விடும். குண்டுபட்ட கப்பல்தான் சமுத்திரத்துக் கடியில் தரைமட்டம் வரையில் மூழ்கிக் கொண்டிருக்கும். அந்த நீர்மூழ்கிக்கப்பல் தண்ணீர் மட்டத்துக்கு மேலேபோயிருந்தாலும்போயிருக்கலாம். அல்லது சமுத்திரத்துக்குள்ளேயே வெகுதூரத்தைக் கடந்து சென்றாலும் சென்றிருக்கலாம். கப்பற் சண்டை மிக விநோதமானது; 'அறிவு' நிறைந்தது; சுறுசுறுப்பு மிகுதியாகவேண்டும்; இவற்றையெல்லாம்விட யுத்தக் கப்பலிலே, பாதுகாப்புக்கும் எதிர்ப்புக்கும் வேண்டிய சகல விஞ்ஞானப் போர்க்கருவிகளும் பொருத்தப்பட்டிருக்கவேண்டும். பாதுகாப்பதைவிட நாசப்படுத்துகிற கருவிகளே முக்கியம். ஏனெனில், எதிரியை நாசப்படுத்திவிட்டால் பிறகு பாதுகாத்துக் கொள்ளவேண்டிய அவசியமே ஏற்படாதல்லவா? எதிர்ப்பை நாசப்படுத்திவிட்டால் பாதுகாப்பு எதற்கு?

ஜர்மெனி இக்காரணத்தால்தானே என்னவோ கப்பற்படையில் மிகுந்த கவனஞ் செலுத்தி, கப்பல்களை நாசப்படுத்துவதிலேயே கண்ணுங்கருத்துமாயிருக்கிறது. சமாதான காலத்திலிருந்தே அது இந்த நாசமாய்ப் போகிற வேலையைத்தான் செய்துகொண்டு வந்திருக்கிறது. பிரிட்டனோ பிற தேசங்கள் தன்னைத் தாக்குமென்பதை நன்றாயுணர்ந்திருப்பதால் (பிற தேசங்கள் ஏன் தாக்கும் என்கிற காரணம் அதற்குத்தான் தெரியும்) அது பிற தேசங்களுடைய தாக்குதல்களுக்குத் தற்காப்பு செய்து கொண்டிருப்பதிலேயே கவனஞ் செலுத்துகிறது. இம்மாதிரி நீண்டகால அபாய நிலையில் இருந்துகொண்டிருப்பதைவிட, நிரந்தரமாக பயமற்று வாழ்கிற ஒரு நிலையைக் காந்தியடிகளைப் போன்ற பெரியார்கள் அதற்கு உணர்த்தினாலும், அது பழைய பயங்கொள்ளி நிலையில் வாழத்தான் பிரியப்படுகிறது. இது வேறு விஷயம்; ஆரம்பித்த விஷயத்தைப் பிடிப்போம்.

தரை, வானம், கடல் ஆகிய மூன்றினுள் கடற் சண்டை மிகப் பிரமாதமானது. இக் கடற் சண்டையில் கையாளப்படுகிற கருவிகள் விநோதமானவை.

### நீர் மூழ்கி

'சப்மரின்' என வழங்கப்படும் நீர்மூழ்கிக் கப்பல் ஜர்மெனியிடம் தான் இருக்கிறதென்று சிலர் நினைக்கிறார்கள். இது தவறு. ஒரு புதிய விஷயத்தை ஒரு தேசம் கண்டுபிடித்திருக்கலாம். ஆனால், அது கண்டுபிடித்து பகிரங்கத்துக்கு வந்துவிடுமானால், அதை எந்த தேசம் அடுத்தாற்போல் காப்பியடித்ததென்று சொல்ல முடியாது. ஒரே மூச்சில் எல்லாத் தேசங்களும் காப்பியடிக்கும். கண்டுபிடிக்கப்பட்ட விஷயத்தைப் போல், தன் தேவைக்குத் தகுந்தாற்போலவும் சக்திக்குத் தகுந்தாற்போலவும் செய்து கொண்டுவிடும்.

ஆகவே, சப்மரின் என்ற நீர் மூழ்கிக் கப்பல் எந்த எந்த தேசத்துக்குத் தேவையோ அதனிடமெல்லா மிருக்கின்றது. இப்போது ருஷ்யாவுடன் போர்புரிந்து கொண்டிருக்கின்ற பின்லாந்து இருக்கிறதே, இதனிடம்கூட சப்மரின் இருக்கிறது. உலகத்திலேயே மிகச் சிறிய அழகிய (!) சப்மரின் பின்லாந்திடந்தான் இருக்கிறது. சுமார் 100 டன் எடையுள்ளது. சாதாரண சப்மரின்கள் 200 முதல் 350 அடி நீளத்தில் சுமார் 1500 டன்னுக்குமேல் 2500 டன் எடையுள்ளதாக இருக்கும்.

மிகப் பெரிய சப்மரின் பிரான்ஸ் வசமிருக்கிறது. அதன் பெயர் சர்கூப். 2750 டன் எடையுள்ளது.

உலகத்தில் எல்லா சப்மரின்களையும் சேர்த்தால் 500 தான் இருக்குமென்று சொல்லப்படுகிறது. ஆனால் இதை நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஏனெனில், ருஷ்யாவின் பலத்தை எவராலும் மதிப்பிடமுடியாது. அதனிடம் 125 சப்மரின்களிருப்பதாகவுஞ் சொல்லப்படுகிறது. பின்லாந்தில் ருஷ்யா திணறுவதைப் பார்க்கும்போது, அதன் திட்டமும் சக்தியும் வேட்டைக்கு உதவாதவைகளோ எனச் சந்தேகிக்கும்படி இடமுண்டாயிருக்கிறது. ருஷ்யா வாஸ்தவமாகவே பின்லாந்து பூராவையும் பிடித்துக் கொண்டால்கூட நாம் நம்புவதற்கில்லை. ஏனெனில், அது பின்லாந்தில் சண்டை சச்சரவே கிடையாதென்று சொல்லியிருக்கிறதல்லவா? இப்படிச் சொல்லியிருப்பதைப் பார்த்தால் அது ஏற்கனவே பின்லாந்து பூராவையும் பிடித்துக்கொண்டு விட்டதாக்கும்; அதனால்தான் அப்படிச் சொல்லுகிறதென்று கூடச் சிலர் நினைப்பர். ஆகவே, ருஷ்யாவை நம்பி எவரும் ஒரு புள்ளி விபரம் எடுப்பது தவறாகிவிடும்.

சப்மரின் சமுத்திரத்தின் அடிமட்டத்தில்கூடப் போகுமென்று நினைப்பது தவறு. தண்ணீரில் ஆழத்துக்குப் போவது சிரமம். ஒரு சப்மரின் மிக ஆழமாகச் சென்றால் 400 அடி தான் செல்லலாம். அது நல்ல உறுதியுடனிருந்தால்தான் இவ்வளவு ஆழத்துக்குச் செல்லலாம். இதைவிட ஆழத்துக்குப்போக முயன்றால், மேலேயுள்ள தண்ணீரின் கனம் தாங்கமாட்டாமல் சப்மரின் உடைந்து போய்விடும். சாதாரணமாக சப்மரின் 200 அடி ஆழத்தில்தான் சஞ்சரிக்கும்.

சப்மரினில் கடல்நீர் நிரப்பப்பட்டால் அது ஆழத்திற் செல்லும். மேலே நீர்மட்டத்திற் செல்ல வேண்டுமாயின் நிரப்பியிருந்த கடல் நீரைத் திறந்துவிட்டுவிட வேண்டும்.

'பெரிஸ்கோப்' என்பது சப்மரினுக்கு மேலே, அதாவது நீர்மட்டத்துக்கு மேல் ஒருகொடிமரம்போல் உயர்ந்திருக்கும். இதை உள்ளே இழுத்துக்கொள்ளவும், 30 அடி வரை மேலே உயர்த்தவும் முடியும். நீர்மட்டத்தில் 13 மைல் சுற்றளவில் தெரியக் கூடிய கப்பலோ, விமானமோ, படகோ, துறைமுகமோ, எதாயிருந்தாலும் அவ்வளவும் பெரிஸ்கோப் கண்ணாடியில் பட்டு, அதன் பிரதிபிம்பம் கீழேயுள்ள கண்ட்ரோலரின் அறையில் சினிமாப்படம் போல் தெரியும்.

சப்மரினில் ரேடியோ உண்டு. சமுத்திரத்துக்கடியில் இருந்துகொண்டே செய்திகளையனுப்பலாம்; வாங்கலாம். சமுத்திரத்தின் எந்தக் கோடியில் எந்த ஆழத்தில் இருந்தாலும் ஹிட்லர் தன் சப்மரின்களுக்கு அவ்வப்போது செய்திகள் பரப்பிக் கொண்டிருப்பதாய், யுத்தச்செய்திகளிலிருந்து அறிகிறோமல்லவா?

சப்மரின் சாதாரணமாக தண்ணீருக்குள் மணிக்கு 12 மைல் வேகத்தில் போகும். அதுவும் 100 மைலுக்கு மேல் இப்படிப் போகமுடியாது. எனவே எதிரிவந்தால் தான் முழுகிக் கொண்டு இப்படிப் போகும்; எதிரியைத் தாக்க நினைக்கும்போது.

### டார்பிடோ

சப்மரின்களில் டார்பிடோக்கள் இருக்கும். சாதாரணமாக 6 முதல் 18 அல்லது 20 வரை இருக்கும்.

மற்றும் 4 அங்குலச் சுற்றளவுள்ள பீரங்கிகள், 5 அல்லது 6 இணைக்கப்பட்டிருக்கும்.

ஒரு டார்பிடோ 4 டன் கனமிருக்கும். அதில் சுமார் 1000 பவுண்டு மருந்து வைக்கப்பட்டிருக்கும். நீளத்தில் 14 அடி முதல் 25 அடி வரையில் உண்டு. முக பாகத்தின் முனையில் ஊசிபோல ஒரு கம்பிநீளமாயிருக்கும். அதை உள்ளே அழுத்தினால், அது அழுந்தி உள்ளேயிருக்கும் மருந்தில் பட்டு வெடிக்கவைக்கும்.

இந்த டார்பிடோக்கள் பிரயோகிக்கப்பட்டவுடன், ஆழத்தில் ஒரே மாதிரியாக ஓடவும், குறி தப்பாதிருக்கவும் சின்னஞ்சிறு இயந்திரங்கள் செய்து

(12-ம் பக்கம் பார்க்க)

‘சுதந்திர தினம்’ பற்றி காரியக்கமிட்டி

# உணர்ந்து இருதய சுத்தியுடன் செய்யவேண்டும்

## ‘சுதந்திர தினப்’ பிரதிக்ஞையின் வாசகம்

### அபிப்பிராய பேதமிருந்தால் அறிவியுங்கள்

★

இந்தியா தேசம் பூராவிலுமுள்ள காங்கிரஸ்காரர்கள், 1940-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ந் தேதி பொதுக் கூட்டங்களிலோ, அல்லது தனி இடங்களிலோ கீழ்க்காணும் பிரதிக்ஞையைச் செய்யவேண்டுமென, காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றியுள்ள ஒரு தீர்மானம் வற்புறுத்துகின்றது. பிரதிக்ஞையின் வாசகம்:

“சுதந்தரம் பெற்று, தங்களுடைய வேலைகளினால் கிடைக்கும் நலன்களை அனுபவிப்பதும், வளர்ச்சி யடைய பூர்ண சந்தர்ப்பம் கிடைக்க வாழ்க்கைத் தேவைகளுடன் இருப்பதும் இந்திய மக்களின் பிரிக்க முடியாத உரிமையென்று நாங்கள் நம்புகிறோம். எந்த சர்க்காராவது ஜனங்களின் இந்த உரிமைகளைப் பறித்து அவர்களை ஒடுக்கினால், ஜனங்களுக்கு, அந்த சர்க்காரை மாற்ற அல்லது அழிக்கவும் ஒரு உரிமை யிருக்கிறதென்றும் நாங்கள் நம்புகிறோம்.

“இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய மக்களின் சுதந்திரத்தைப் பறித்ததோடல்லாமல், பாமர மக்களைச் சுரண்டுவதை அஸ்திவாரமாகக் கொண்டே அப்பிரிடிஷ்சர்க்கார் இங்கு இருந்து வருகிறது; பொருளாதாரத்திலும், அரசியலிலும், கலாசாரத்திலும், ஆத்மவழியிலும் இந்தியாவை நாசமாக்கி விட்டது. எனவே நாங்கள் பிரிட்டிஷ் தொடர்பை அறுத்தெறிந்து பூர்ண சுயராஜ்யமடைந்து சுதந்திரமடைய வேண்டுமென்று நம்புகிறோம்.

“எங்கள் சுதந்திரத்தை யடைய மிகுந்த தீவிர வழி, பலாத்காரமல்லவென்பதை நாங்கள் உணருகிறோம். சமாதான, நியாயமான முறைகளைப் பின்பற்றுவதின் மூலம் இந்தியா பலமும் தன்னம்பிக்கையும் அடைந்து சுயராஜ்யப் பாதையில் வெகு தூரம் முன்னேறி யிருக்கிறது. இம் முறைகளை மேற்கொள்வதின் மூலம்தான் நமது நாடு சுதந்திர மடையும். இந்தியாவின் சுதந்திரத்தைப் பெறுவதென மீண்டும் பிரதிக்ஞை செய்துகொள்கிறோம், பூர்ண சுயராஜ்யம் கிடைக்கும் வரை சாத்விகப் போராட்டத்தை நடத்துவதென உறுதி கொள்கிறோம். பொதுவாக சாத்வீக நடவடிக்கைக்கும், குறிப்பாக சாத்விகப் போருக்குத் தயாராகவும் கதர், வகுப்பு ஒற்றுமை, தீண்டாமை ஒழித்தல் முதலியவை அடங்கிய நிர்மாணத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்க வேண்டியது அவசியமென நாங்கள் நம்புகிறோம். ஜாதி மதபேதமின்றி நம் நாட்டு சகோதரர்களிடையே நல்லுணர்ச்சி பரவ நாங்கள் எல்லாச் சந்தர்ப்பங்களையும் உபயோகிப்போம்.

“புறக்கணிக்கப்பட்டிருக்கிறவர்களை அறியாமையிலிருந்தும் வறுமையிலிருந்தும் கைதூக்கிவிடவும், தாழ்த்தப்பட்டவர்களாகவும் ஒடுக்கப்பட்டவர்களாகவும் கருதப்படும் ஜனங்களின் நலன்கள் அபிவிருத்தியடையவும் நாங்கள் முயற்சிப்போம். ஏகாதிபத்திய முறையை ஒழிக்க நாங்கள் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிற போதிலும் இங்கிலீஷ்காரர்களோடு—அவர்கள் அதிகாரிகளாயிருந்தாலும் சரி, உத்தியோகப்பற்றில்லாதவர்களா யிருந்தாலும் சரி—நமக்கு யாதொரு சண்டையும் இல்லையென்பது நமக்குத்தெரியும். ஜாதி இந்துக்களுக்கும், ஹரிஜனங்களுக்குமிடையே உள்ள வேறுபாடுகள் ஒழிக்கப்படவேண்டுமென்பதே நோக்கம். ஹிந்துக்கள் தங்கள் அன்றாட நடத்தைகளில் இந்த வேறுபாடுகளை மறந்துவிட வேண்டுமென்பதும் எங்களுக்குத் தெரியும்.

“நாம் பல்வேறு மதத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தபோதிலும், இதைப் போல வேறுபாடுகள் அஹிம்ஸா முறை வேலைகளுக்குப் பெரிய முட்டுக்கட்டையாகும். நாங்கள் ஒரே தேசத்தைச் சேர்ந்தவர்களாகவும், ஒரே ராஜீய, பொருளாதார லக்ஷியங்களுடையவர்களாகவும் இருப்பதால், எங்கள் பரஸ்பர உறவுகளில் நாங்கள் இந்தியத் தாயின் குழந்தைகளைப் போல் நடந்துகொள்ளுவோம்.

“இந்தியாவிலுள்ள 7 லக்ஷகிராமங்கள் புத்துயிர் பெறவும், பாமர மக்களின் பரிதாபகர மிக்க வறுமையைப் போக்கவும் நமது நிர்மாணத் திட்டத்தில், சர்க்காவும் கதரும் ஒரு பகுதியாகும். எனவே, நாங்கள் தவறாமல் நூற்போம். சொந்த தேவைகளுக்குக் கதரைத் தவிர வேறு எதையும் உபயோகிக்க மாட்டோம். கூடுமானமட்டில் கிராமக்கைத்தொழில் சாமான்களையே வாங்குவோம்; இதைப் போலவே இதரர்களும் செய்ய நாங்கள் முயற்சிப்போம். காங்கிரஸ் தத்துவங்களையும், கொள்கையையும் கட்டுப்பாடாக அநுஷ்டிப்பதாகவும், இந்திய சுதந்திரப் போரை நடத்த வருமாறு காங்கிரஸ் அழைக்கும் சமயத்தில் உடனே வரத் தயாராகவும் இருப்பதாகப் பிரதிக்ஞை செய்கிறோம்.”

#### தீர்மானத்தின் வாசகம்

காங்கிரஸ் காரியக் கமிட்டி ‘சுதந்திர தினம்’ சம்பந்தமாக நிறைவேற்றிய தீர்மானித்தின் வாசகம் பின்வருமாறு:—

“1940ம் வருஷம் ஜனவரி மாதம் 26ந்தேதி சுதந்திர தினத்தைப் பக்தியுடன் அநுஷ்டிக்கவேண்டியதின் அவசியத்தை எல்லா காங்கிரஸ் கமிட்டிகள், காங்கிரஸ்காரர்கள், இந் நாட்டினர் அனைவரின் கவனத்திற்கும் கொண்டுவர காங்கிரஸ் காரியக் கமிட்டி விரும்புகிறது. 1930ம் வருஷத்திலிருந்து இந்த தினம் நாடு பூராவும் தவறாமல் அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இது நமது சுயராஜ்யப்போரில் குறிப்பிடத்தக்க நாளாகிவிட்டது. இந்தியாவிலும் உலகத்திலும் இப்பொழுது நடந்து வரும் நெருக்கடியையும், நமது போராட்டம் இன்னும் கடுமையாக நடக்கவேண்டியிருப்பதையும் கவனிக்குங்கால் இந்த தினத்தை நாம் 1940ல் அநுஷ்டிக்கப்போவதிலுள்ள விசேஷ முக்யத்வம்விளங்கும். எனவே இக் கொண்டாட்டம், விடுதலையைப் பெற நமது தேசீய உறுதியை அறிவிப்பதாக மாத்திரமல்லாமல், அந்த போராட்டதிற்குநாம்தயாராவதையும் கட்டுப்பாடான நடவடிக்கைக்கு நாம் பிரதிக்ஞை செய்து கொண்டிருப்பதையும் அறிவிக்கவேண்டும். எனவே எல்லா காங்கிரஸ் கமிட்டிகளும், தனிப்பட்ட காங்கிரஸ்காரர்களும் மேலே கூறப்பட்டுள்ள பிரதிக்ஞையை அதற்கென கூட்டப்படும் பொதுக்கூட்டங்களில் எடுத்துக்கொள்ளுமாறு காரியக் கமிட்டி கட்டளையிடுகிறது. தேக அசௌக்கியத்தாலோ, அல்லது நடமாட முடியாததாலோ கூட்டத்திற்கு வர முடியாதவர்கள், தங்கள் வீடுகளில் தனியாகவோ அல்லது கோஷ்டிகளாகவோ பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளவேண்டும். நடத்தப்பட்ட கூட்டங்கள், தனியாகவோ, அல்லது கோஷ்டிகளாகவோ பிரதிக்ஞை எடுத்துக் கொண்ட விவரம் ஆகியவற்றை மாகாணக் காங்கிரஸ்கமிட்டிகளுக்குத் தெரிவிக்குமாறு ஸ்தாபனங்களுக்கும், தனிப்பட்ட நபர்களுக்கும் இக்கமிட்டி யோசனை கூறுகிறது.

#### ஒரு எச்சரிக்கை

“பிரதிக்ஞையில் உள்ளவற்றில் நம்பிக்கை யில்லாத யாரும், சம்பிரதாயத்திற்காக அந்தப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள மாட்டார்களென்று கமிட்டி நம்புகிறது. பிரதிக்ஞையில் இருப்பதில் நம்பிக்கையில்லாத காங்கிரஸ் காரர்கள் தங்களுடைய ஆட்சேபத்தைக் காரணங்களுடன் மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக்கு அனுப்பிவிட வேண்டும். இந்த நபர்கள் தங்கள் பெயர்களையும் விலாசங்களையும் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதற்காக இத் தகவல் கேட்கப்படவில்லை. பிரதிக்ஞையிலுள்ளதற்கு ஆட்சேபனைகள் எவ்வளவு இருக்கிறதென்பதை அறியவே கேட்கப்படுகிறது.

இஷ்டப்படாத காங்கிரஸ்காரர்கள் மீது பிரதிக்ஞையைவற்புறுத்தக் காங்கிரஸ்காரர்கள் விரும்பவில்லை. சாத்விக ஸ்தாபனத்தில் நிர்பந்தத்திற்கே இடம் கிடையாது. பிரதிக்ஞையிலுள்ள முக்கிய நிபந்தனை கட்டுப்பாடாக நிறைவேற்றப்பட்டால்தான் சட்டமறுப்பை ஆரம்பிக்கமுடியும்.”

#### ஆலயப் பிரவேசம்

சிதம்பரத்துக்கு மேற்கே 7 வது மைலில் குடுவேலி என்ற கிராமத்திலுள்ள கோயிலில் 19ந் தேதி செவ்வாய்க்கிழமை ஆலயப் பிரவேசம் நடந்தது. கிராமவாசிகளுக்குப் பொதுவாயுள்ள பெரிய குளத்தில் ஹரிஜனங்கள் ஸ்நானம் செய்துவிட்டு (இப்படி ஸ்நானம் செய்வது முன்பு தடுக்கப்பட்டு வந்தது), ஊர்வலமாகச் சென்று வெள்ளைப்பிள்ளையார்கோயில், பண்ணைத்தெரு பிள்ளையார் கோயில், சங்கிலிக்கருப்பன் கோயில் (இவைகளில் முன்பு அனுமதிக்கப்படவில்லை, ஆகியவற்றுள் சென்று சுவாமி தரிசனம் செய்தனர். அங்குள்ள காங்கிரஸ் ஊழியர் ஸ்ரீ ராஜகோபால் படையாச்சியின் முயற்சியே இம் முன்னேற்றத்துக்குக் காரணம்.





இதுவரையில் நாம் கவனித்த விஷயங்களைச் சற்று நினைவூட்டிக் கொள்வோம். ஆரம்பத்தில் இப்போதுள்ள அரசியல் முறையை ஆராய்ந்தோம். இது அறிவுக்குப் பொருத்தமற்றதென்று அறிந்தோம். இதன் விளைவால் மனித சமூகத்துக்குள் ஏழை—பணக்காரர் எனும் போராட்டம் நிரந்தரமாக நடந்துகொண்டிருக்கிறதென்று கண்டோம். மற்றும் பணக்காரர்களும் சௌகரியமாயில்லாமல், என்றென்றும் பயந்துகொண்டே அறிவுக்கும் தேகத்துக்கும் பயிற்சியளிக்கவேண்டிய அவசியமில்லாமல், அபிவிருத்தியடையாது பிற்போக்கடையக்கூடிய நிலையில் இருந்து கொண்டிருக்கிறார்கள் என்பதையும் உணர்ந்தோம்.

இம்முறையை மாற்றத்தான்வேண்டும் என்ற முடிவுக்கு வந்து, மாற்றி எந்த முறையை ஏற்படுத்தலாமென்று இப்போது சர்ச்சை செய்து கொண்டிருக்கிறோம். நான் அபேதவாத முறையைப் பிரஸ்தாபித்தேன். அபேதவாதம் என்று கூறப்படுகிற சமவருமானப் பொருளாதார முறையை நீங்கள் ஏற்றுக்கொள்ளாவிடில், உங்கள் அறிவில் புலனாகக்கூடிய வேறு உபாயங்கள் இருக்குமானால் தெரிவிக்கும்படி உங்களைக் கேட்டிருந்தேன்.

நீங்கள், இப்போதுள்ள முறையை மாற்றிவிட்டுக் கீழ்க்கண்ட முறைகளில் ஏதேனும் ஒன்றை ஏற்படுத்தலாமென்றுதான் சிபார்சு செய்யக் கூடும்—அபேதவாத முறையை ஒப்புக்கொள்ளாவிடில்.

1. அவனவன் செய்த வேலையின் பலனை அவனவன் அனுபவித்துக் கொள்ளல்.

இந்தமுறை அனுஷ்டானத்தில் நிறைவேற்ற முடியாத ஒன்றென்பதைச் சென்ற வாரத்தில் சில உதாரணங்கள் மூலம் காட்டியிருந்தேன். பருத்தி விவசாயம் செய்கிறவன் பருத்தியைக் கொட்டை யெடுத்து, நூற்று, நெய்து கடை வைத்து விற்றுப் பணமாக்கி அதை யனுபவிக்க முடியாது. ஆடு வளர்ப்பவன் கசாப்புக்கடை வைத்து, ஆட்டுத் தோலைப் பதனிட்டு, செருப்பு அல்லது பூட்சு செய்து விற்றுப் பணமாக்கி அதை யனுபவிக்கமுடியாது. பத்திரிகாலயத்திலுள்ள ஆசிரியர் கம்போஸ் செய்து, பிழைதிருத்தி, பக்க உருவாக்கி, இயந்திரத்திற் கொடுத்து, அச்சடித்துச் சந்தாதார்களிடம் சேர்ப்பித்துப் பணம் வசூலித்து அனுபவிக்கமுடியாது. இப்படி ஓர் ஆசிரியர் கிளம்பினால் மறுநாள் டைப் வார்க்கிறவர் அல்லது பேப்பர் உற்பத்திக்காரர் ஆசிரியரைவிட தாமே ஆதியானவர் என்று வந்துவிடுவார்.

1. அப்படிப் பார்த்தால் டைப் வார்க்கிறவரையோ அல்லது ‘பேப்பர்’ உற்பத்திக்காரரையோகூட நாம் மூலப் பேர்வழிகள் என்று சொல்ல முடியாது. டைப்புக்குக் காரணம் ஈயம். ஈயத்தைச் சுரங்கத்திலிருந்து எடுக்கிற தொழிலாளி ‘நானே ஆதி’ என்று ஆசிரியர் பதவிக்குப் போட்டியிட வந்து விடுவார். ‘பேப்பர்’ உற்பத்திக்கு முக்கியமான மூலப்பொருள் மரம். மரத்தை வெட்டுகிறவர் அல்லது மரங்களை யெல்லாம் அழிக்காமற் காடுகளைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிற விலங்கினங்கள் தாம் இதற்கு மூலப் பேர்வழிகள்! ஊன்றிப் பார்க்கப் பார்க்க இது முட்டாள் தனத்தில் கொண்டு போய் விடும். ஆகவே, தனி மனிதனால் எந்தக் காரியமும் நடைபெற முடியாது. அவனவன் உற்பத்தி செய்வதை அவனவன் அனுபவித்துக் கொள்வதென்ற திட்டத்தைநாம் ஏற்படுத்த முடியாது. எந்த ஒரு காரியமாயிருந்தாலும் அது சம்பந்தப்பட்ட சகல விஷயங்களையும் ஒரு மனிதன் பூரணமாகத் தெரிந்திருக்கமாட்டான். ஆசிரியருக்குக் கம்போஸ் செய்து, பிழை திருத்தி, சட்டத்தில் வைத்து, இயந்திரத்திற் கொடுக்கத் தெரியாது. மோட்டார் ஓட்டுகிறவன் மோட்டார் செய்ய மாட்டான்; அதுவும் இப்போது டிரைவர்களாய் வருகிறவர்களில் மிகுந்த நாகரிகக்காரர்கள் சொல்லுவதை நீங்கள் கேட்டதில்லையா? மோட்டார் சிறிது பழுதடைந்து விட்டால், அவர்கள் சொல்லுவார்கள்- “சார் மோட்டார் ரிப்பேர் ஆகிவிட்டது. மெக்கானிக்கிடம் கொடுக்க வேண்டும்” என்று!

## ‘ருஷ்யாவும் எதிர்கால உலகமும்’

# கொள்ளையடிக்கும் திட்டம்

காவி

7

இவ்வளவு தூரமேன்? வேலையின் பலனை அவனவனே அனுபவிப்பதென்றால், வயலில் வேலை செய்கிற விவசாயிகளைத் தவிர நாம் அனைவரும் ஒரு கவளம் சோறு தின்பதற்குக் கூட யோக்கியதை யற்றவர்களாக ஆகிவிடுவோம். சக்கிலியர்கள் நம் கால்களிலுள்ள பூட்சுகளையும் செருப்புகளையும் பிடுங்கித் தம் கால்களில் அணிந்து கொள்வார்கள். நம்மிடமுள்ள மோட்டார் கார்களைத் இங்கிலாந்துக்கோ அமெரிக்காவுக்கோ அனுப்பி அங்குள்ள தொழிலாளர்களிடம் ஒப்படைக்க நேரிடும். இவையெல்லாம் முட்டாள்தனமான காரியங்கள். ஆகவே, வேலையின் பலனை அவனவனே அனுபவிப்பதென்கிற இந்த முதற்திட்டம் நடைமுறைக்கு ஒவ்வாதது என்று நான் ஒதுக்கித் தள்ளுவதில் உங்களுக்கு ஆட்சேபனை யிருக்காதென்று நினைக்கிறேன்.

2. வேலை செய்கிற நேரத்தை அளவு கோலாய்க்கொண்டு, யார் யார் அதிக நேரம் வேலை செய்கிறார்களோ அவர்கள் அனைவரும் அதிக சௌகரியங்களை அனுபவிப்பது என்றும், வேலை செய்யாத சோம்பேறிகளைப் பட்டினி போட்டுக் கொல்லுவதென்றும் சிலர் யோசனை கூறலாம்.

சென்ற வாரத்தில் விறகு வெட்டியின் உழைப்பு நேரமும் டாக்டரின் உழைப்பு நேரமும் என்னுடைய உழைப்பு நேரமும் ஒன்றுபோல் பாவிக்கப்பட முடியாதென்றும், ஒவ்வொருவரும் அவரவர் செய்கிற வேலையையே பிரமாதப்படுத்திப் பேசுவர் என்றும் சொல்லியிருந்தேன். அக் காரணங்களைத் தவிர, இன்னும் பல இருக்கின்றன. காலை 8 முதல் 11மணி வரையிலும் மாலை 3 முதல் 5 வரையிலும் எல்லோரும் உழைக்க வேண்டுமென்று நம் பொதுவுடைமை இந்தியாவில் ஒரு சட்டம் ஏற்படுத்தினால், மத்தியானம் 12 மணி அல்லது மாலை 6 மணிக்கு ஒரு நோயாளிக்கு உயிர் இழுத்துக் கொண்டிருந்தால், நேரம் தவறி உழைக்க மாட்டேன் என்று டாக்டர் மறுக்க இடமேற்படுமல்லவா? ஆகவே, இரவில் சிலர் தூங்காமல் விழித்துக்கொண்டு உழைப்பதை நாம் தவிர்க்க முடியாது. இவர்களுடைய வேலை நேரத்தையும் பகலில் உழைக்கிறவர்களுடைய வேலை நேரத்தையும் ஒன்றாய்ப் பாவிக்கமுடியுமா?

மூளைச் சிரமத்துக்கும் தேக உழைப்புக்கும் ஒரு சம்பந்தத்தை ஏற்படுத்திவிட்டதாகவே வைத்துக்கொள்வோம். விசேஷ அறிவு இல்லாமல் விசேஷ உடற்கட்டைப் படைத்தவன் 6 மணி நேரம்வேலைசெய்யவேண்டுமென்றும்; விசேஷ அறிவு படைத்து சற்று பலஹீன தேகத்தையுடையவன் 3 அல்லது 4 மணி நேர வேலை செய்ய வேண்டுமென்றும் ஒரு முறையை நீங்கள் தாராளமாக ஏற்படுத்துங்கள். அதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் உணவுப் பொருள்களிலும், ஆடை விஷயங்களிலும், குடியிருப்பு வசதிகளிலும் சலுகை காட்டி ஓரவஞ்சகமாக நடந்து கொள்ளுகிறாற் போல உங்கள் திட்டம் ஏற்படுத்திவிடக்கூடாது. அதாவது, ஒருவன் அதிகமாக உழைத்தால் அவனுக்குத் தேவைக்குமேல் அதிகமான சௌகரியங்களை எந்த சந்தர்ப்பத்திலும் தரவே கூடாது. ஏனெனில் தேவைக்கு மேற்பட்ட விஷயங்கள் அவனுக்கு எதற்காக? அவை அவனுக்குச் சௌகரியங்களா யமையாமல், வசதிகளைச் சேர்த்துவைப்பதில் ஒரு வீண் ஆசையையுண்டாக்கி, பிற்காலத்தில் சோம்பேறியாயிருப்பதை ஒரு சுகமென்று நினைக்கும்படியுஞ்செய்து விடுகின்றன. இப்படியே பலர் பிற்கால சோம்பேறி வாழ்வை ஒரு சுகமென்று நினைத்துக் கொண்டு மேலும் மேலும் இவ் ஆசையை வளர்த்துக் கொண்டே உயிர்நீத்து விடுகின்றனர். மற்றும் இளம் பிராயத்தில் உழைப்பவர்கள், தம் பிற்கால வாழ்வைப்பற்றி இவ்வாறு எண்ணி ஓய்வுபெற நினைத்தாலும் கூட, அவர்கள் சுடுகாடு சேருகிறமட்டும் தாம்உழைப்பதை நிறுத்தவேமாட்டார்கள். பொதுவுடைமை இந்தியாவில், தள்ளாதவர்களுக்குரிய சலுகை ஓர் உரிமையைப்போல் பாவிக்கப்படுமாதலால், சொத்து சேர்ப்பதற்குரிய மார்க்கம் அல்லது ஆவலே ஏற்படாதபடி பார்த்துக் கொள்ளப்படும். அப்படிச் செய்தால், இப்போது பணக்காரர்களுடைய பிள்ளைகளிற் பலர் உழைக்காமலே — ஜீவனோபாய மார்க்கந் தேடுஞ் சிரமத்தை உணராமலே காலந்தள்ளுவதைத் தவிர்த்து, அவர்களையும் உலக மனித சமூகத்துக்குள் சேர்த்து ஏகோபித்து ஒரு குடும்பம்போல் அபிவிருத்தியடையச் சந்தர்ப்பம் ஏற்பட்டுவிடும்.

ஆதலின், உழைக்கிற நேரத்தைக் கொண்டு சௌகரியங்களைப் பெருக்குவதும் குறைப்பதும் தீது. எவ்வித உழைப்புக்கும் லாயக்கற்றவர்கள் நீங்கலாக, எல்லோரும் உழைக்க வேண்டுமென்பது சட்டமாயிருக்க வேண்டும். எவ்வித சௌகரியமும் தனக்குத் தேவையில்லை யென்று உழைக்க மறுக்கிறவனுடைய காதைத் திருகி, தொழிற்சாலையில் கொண்டு போய்விட்டு உட்கார்த்திவைக்க வேண்டும். உலகமே உழைத்துக் கொண்டிருக்கிறதைக் கண் கூடாய்ப் பார்க்கிற அவன், தானாகவே 10 நிமிஷ நேரத்தில் சுத்தியல் அல்லது சம்மட்டி அல்லது பேனாவைத் தூக்கிக் கொள்வான். உழைப்பு பொது. சௌகரியங்கள் சமம்!

3. அவனவன் கையிற் கிடைத்ததை, தன் தன் சாமர்த்தியத்தைக் கொண்டு தானாகவே தேடிக்கொள்வது

வாசகர்களைப் பயமுறுத்தக் கூடாதென்று கூடுமானவரையில் இதை நீட்டி முழக்கிச் சொல்லியிருக்கிறேன். இம் முறையின் அர்த்தம் ‘எல்லோரும் முடிந்தவரை கொள்ளை யடித்துக் கொள்ளலாம்’ என்பதுதான்.

(10-ம் பக்கம் பார்க்க)

ஸ்ரீ ரமண மகரிஷி

# ஞானியையும் அஞ்ஞானியையும் அரவணைக்கும் ஆஸ்ரமம்

## அழகம்மை பெற்றெடுத்த வேங்கடராமன் வரலாறு

### மரண பயம் பற்றியதும் மதுரையை விட்டோடியதும்

★

ஸ்ரீ ரமண மகரிஷிக்கு நேற்றுடன் 60 ஆண்டுகள் பூர்த்தியாயின. பல்லாயிரக்கணக்கான இந்தியர்களுடைய உள்ளத்தில் அவர் இடம்பெற்றிருக்கிறார். நூற்றுக்கணக்கான வெளிநாட்டார் அவரைப் போற்றிப் புகழ்கின்றனர். ஸ்ரீ ரமணரின் வரலாறு ருசிகரம் வாய்ந்தது.

திருவாதிரை ஆருத்ரா தரிசன தினத்தன்று 1879ம் ஆண்டு டிசம்பர் 30-ம் நாள் இரவு 1மணிக்கு ஸ்ரீ ரமணர் பிறந்தார். 1896ம் ஆண்டுவரையில் அவர் வேங்கடராமன் என்றே வழங்கப்பெற்ருர். சிறு பிராயத்தில் சாதாரணமான பையன்களைப்போல விளையாட்டில் தான் அதிக நேரத்தைப் போக்குவார். எனினும் விளையாட்டிலோ படிப்பிலோ அவர் ஆழ்ந்துவிடவில்லை.

அவருடைய வாழ்க்கையில் 17வது பிராயம் மிக முக்கியமானது. இதைப் பற்றி ஸ்ரீ ரமணரே சொல்லியிருக்கிருர்:

"மதுரையில் என்னுடைய மாமன் வீட்டில் நான் தனிமையாய் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்போது என்னுடைய திரேகத்தில் எவ்விதமான கோளாறும் கிடையாது. ஆயினும் திடீரென்று மரணம் என்கிற பயம் என்னைப் பற்றிக்கொண்டுவிட்டது. நான் செத்துப்போய்க்கொண்டிருப்பதாகவே உணர்ந்தேன். எப்படி என்னையறியாமல் மரண பயம் எனக்குள் ஏற்பட்டதோ அதேபோல் அம் மரணத்தை எதிர்த்து நிற்கவேண்டுமென்கிற உறுதியும் எனக்குள் ஏற்பட்டது. மரணம் என்பது என்ன? உடலின் நடமாட்ட வேலைகள் நின்றுவிடுதல்தான். இந்த விஷயம் எனக்குப் புலனானதும் ஒவ்வொரு சிறு அவயவத்திலும் மரண நிலையை உணர்வதுபோன்று பாசாங்கான ஓர் உணர்ச்சியைப் பெற்றேன். அப்போதும்கூட 'நான்' என்கிற அகந்தை இருந்துகொண்டிருந்தது. ஆகையால் நான் மரணத்திற்கு அப்பாற்பட்ட நிலையையுடையதாயுணர்ந்தேன்.

இவைகள் யாவும் எவ்வித முயற்சியுமின்றி தோன்றி மறைந்தன. மரண பயம் தோன்றி மறைந்துவிட்டது. ஆனால் அது மரணத்துக்கு அஞ்சாத ஓர் உறுதியை வேரூன்றிவிட்டுச் சென்றது. அந்த உறுதி மிகுந்த ஊக்கம் 'நான்' என்பதைச் சுற்றிச் சுற்றி ஆராயத் தலைப்பட்டது. அதுமுதல், புறத்தே நின்ற உலக விஷயங்களை மறந்துபோய், அகத்தை ஆராய்ந்தறிவதில் ஆழ்ந்தேன். இத்தகைய ஆழ்ந்த ஆராய்ச்சி ஆர்வத்தினுல் புதிதாக கோயில்கள் மீதும் விக்ரகங்கள் மீதும் அவை உணர்த்துகிற சர்வேஸ்வரன் மீதும் நாட்டம் பிறந்தது. இங்கேயும் விடுதலை ஆர்வம் வேண்டுமென்ற உணர்வு பிறக்கவில்லை. ஏனெனில் வாழ்க்கையின் சுக துக்கங்களை நான் அனுபவித்ததில்லை. புத்துணர்ச்சிகள் என்னை ஆட்கொண்ட வண்ணமாயிருந்தன"

#### மதுரையை விட்டுச் செல்லுதல்

1896ல் ஸ்ரீ மகரிஷி வீட்டை விட்டு ஓடி திருவண்ணாமலையிலுள்ள அருணாசலர் ஆலயத்துட் புகுந்தார். வீட்டிலிருந்து புறப்படுமுன் தம்முடைய தமையனருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் "என் தந்தையை (கடவுளை)த் தேடி, அவருடைய கட்டளைப்படி இந்த இடத்தை விட்டு அகலுகிறேன். நல்லெண்ணத்துடனேயே இவ்விதம் செய்யப்படுகிறது. எனவே, இதற்காக ஒருவரும் வருத்தப்படக் கூடாது. என்னைத் தேடிப் பணத்தைச் சேதப்படுத்த வேண்டாம்" என்று எழுதியிருந்தார்.

தந்தை உபதேசித்த மந்திரத்தின் படியே வீட்டை விட்டுப் பிரிந்தவராதலால், சொந்த வீடு தேடிச் செல்பவர் போல் நேரே திருவண்ணாமலையிலுள்ள அருணாசலர் ஆலயத்தை யடைந்தார்—1896 டிசம்பர் முதல் தேதியன்று.

இவ் ஆலயத்துக்கு உள்ளேயும் வெளியேயும், பல பாகங்களில் ஸ்ரீ ரமணர் தங்கியிருக்கிருர். ஆயினும் அவர் பெரும்பாலும் சமாதி நிலையில் (அதாவது புற உணர்வற்று ஐம்புலன்களையும் அடக்கி கருத்தை ஆன்ம வளர்ச்சியிலே யிருத்தி வைத்தல்—) இருப்பார். புற உணர்ச்சிகளுடன் உள்ள சொற்ப கால நேரங்களிலேயே மக்கள் ஸ்ரீ ரமணரின் ஆசியைப் பெறுவது வழக்கம். இச் சொற்ப நேரங்களில் கூட பகவான் மௌன நிலையில் இருப்பார்.

இரண்டரை ஆண்டுகளுக்குப்பின்னர் ஸ்ரீ ரமணரின் தாயார் தம் மைந்தன் வேங்கடராமனைத் தேடி திருவண்ணாமலைக்கு வந்து சேர்ந்து அவரைத் திரும்ப வீட்டுக்கு அழைத்துச் செல்ல முயன்ருர். அது வீணாயிற்று.

ஸ்ரீ மகரிஷி அருணாசலர் மலையுச்சிக்குச் சென்று ஏதாவது ஒரு குகையில் வாசம் செய்துகொண்டே 20 ஆண்டுகளைக் கழித்தார்.

ஸ்ரீ ரமணரின் பக்தர்களிற் பலர் அத்வைதிகள். சுவாமி விவேகானந்தரின் உபதேசங்களால், மேல் நாட்டறிஞர் பலர் அத்வைதச் சிறப்பை அறியத் தலைப்பட்டனர். இம் முயற்சியில் இவர்களை மறித்து நின்ற இடையூறுகள் பலவற்றை ஸ்ரீ ரமணர் களைந்தெறிந்தார். அதாவது 'யோக வசிஷ்டம்' 'விவேக சூடாமணி' 'கைவல்ய நவநீதம்' ஆகிய சிறந்த வேதாந்த அத்வைத நூல்களிலே பலருக்கு ஏற்பட்ட புரியாத சிக்கல்களை இவர் புரியும்படி ஆக்கிவைத்தார்.

ஸ்ரீ சங்கராச்சாரியாரின் 'விவேக சூடாமணி' 'த்ரிகு-திரிஸ்ய நிவேகம்' ஆகிய இரு நூல்களை எளிய தமிழில் ஆக்கிப் பலருக்கும் விளங்குமாறுச் செய்திருக்கின்ருர். அவர் ஓர் இடத்தில் சொல்லுகிருர்:

"மதம் ஒருவனுக்கு வழிகாட்டும் அதன்வழி சென்ருல் ஓர் இடத்தில் போய் நிற்போம். அந்த இடத்தில் தான் எல்லா மதங்களும் வந்து நிற்கின்றன. அதுவே தெய்வ நிலை."

#### மீண்டும் அழகம்மாள்

ஸ்ரீ ரமணரின் தாயார் அழகம்மாளுக்குக் குடும்பத் தொல்லைகள் அதிகரித்தன. 1916-ல் அவருக்கு ஒன்று தோன்றியது, மைந்தன் வேங்கடராமனிடம் ரூபாய்ச் சேர்ந்து விடுவதென்று! இவர் திருவண்ணாமலையை வந்தடைந்தார். இவரைப் பின்பற்றி ஸ்ரீ ரமணருடைய தம்பியும் வந்துவிட்டார்!

தாயார் காஷாய உடை தரித்தார். சுவாமியின் ஆஸ்ரமத்துக்கு வருகின்றவர்களை உபசரிக்கிற கைங்கரியத்தை மேற்கொண்டு நடத்திவந்தார். 1922 மே மாதத்தில் அவர் உயிர்நீத்தார். அவர் சாகுந் தருவாயில் மகரிஷி அருகிலிருந்து ஆத்மாவுக்கு ஆறுதலளித்து வந்தார். ரமண பக்தர்கள் அன்னாருக்கு ஒரு சிறுகோயில் கட்டினார்கள், இமாத்ருபூதீஸ்வரர் சமாதி என்று அழைக்கப்படுகிறது. அவர் இறந்த தினத்தில் ஆயிரக்கணக்கான ஏழை மக்கள் சாப்பிட்டுப்போவார்கள்.

ரமணாஸ்ரமம் என்பது மனதுக்குச் சாந்தியளிக்கும் ஒரு ஸ்தலம். அருணாசல மலையின் அடிவாரத்தை யொட்டியிருக்கிறது. திருவண்ணாமலை ஊருக்கும் இந்த ஆஸ்ரமத்துக்கும் ஒரு மைல்.

ஆஸ்ரமத்தில் எவ்வித வித்தியாசமும் பாராட்டப்படுவதில்லை. பரதேசியும் பணக்காரரும் ஒன்றே. ஞானியும் அஞ்ஞானியும் சமமாவே அரவணைக்கப்படுவர். ஸ்ரீ ரமணர் நல்லவர்!

—

## தேவகோட்டை

—

தேவகோட்டை சொர்ண மூர்த்தி பெண்பாடசாலையை டாக்டர் டி. என். எஸ். ராஜன் சமீபத்தில் பார்வையிட்டு எழுதியுள்ளதாவது:—

சொர்ணமூர்த்தி பெண்பாடசாலையை இன்று 12-12-39௳ பார்த்தேன். முற்றிலும் தமிழில், தமிழ்ப் பகுதிகளில் பெண்பாலருக்கெனத் தனிப் பள்ளிக்கூடம் நான் பார்த்தது இதுதான் முதல் தடவை. இதில் ஆசிரியராக வுள்ள முருகன் அவர்களை சிலகாலங்களுக்கு முன் நேரில் அவருடைய ஒப்பற்ற ராட்டையுடன் பார்த்தேன். அவர் நூற்கும் திறனையும் கண்டேன்.

மிகத் திறமையுடனும், முறையுடனும் குடும்ப வாழ்க்கைக்குப் போதிய திறனுடனும் நடத்தப்பட்டு வருகிறது. தமிழ் நூல்களின் சிறந்தகருத்துக்களடங்கிய அறிவை சிறுமிகள் அறிந்து படிப்பதையும் கண்டேன். தமிழர்கள் பெருமையோடு கவனித்து ஆதரிக்க வேண்டிய ஒரு கல்விக்கழகமிருக்குமாயின், அது இதுதான் என்று நான் உறுதியாகச் சொல்வேன். முருகன் இப்பள்ளிக்கும், இச்சிறுமிகளுக்கும் பூரண அருள் புரிவாராக!

—





# இந்தியாவில் இல்லையே

ஜனப் ஜின்னு எதிர்பார்த்த அளவில் விமோசன தினம் நடைபெறவில்லை. முஸ்லீம்கள் கூட்டத்தில் இதுபற்றி விசாரித்ததில், தொழுகை நேரத்தில் பரிசுத்தமான இருதயத்துடனிருக்கும்போது ஸ்ரீ ஜின்னுவின் பச்சைப் புளுகுகளை ஆண்டவன் முன் சமர்ப்பிக்கலாமா, அவர்தான் சொல்லுகிருரென்ருல் நீங்களுமா அப்படி எங்களை நினைக்கிறீர்கள் என்று முஸ்லீம் சகோதரர்கள் கேட்கிருர்கள். தவிர ஜனப் ஜின்னுவின் பக்தர்களிற் பலர் தம் மசூதிகளில் வந்து தொழுவதில்லையாம். தம் கூட்டங்களை வேறு எங்கேயாவது நடத்தியிருப்பார்களென்று அவர்கள் நினைக்கிருர்கள். வாஸ்தவந்தானே? ஸ்ரீ ராமசாமி நாயக்கர் மசூதிக்குள் நுழைய முடியுமா?

பம்பாயில் நடந்த பொதுக் கூட்டமே எல்லாவற்றிலும் சிறந்ததென்று சொல்லப்படுகிறது. இரவு 10 மணிக்கு ஆரம்பித்து 1 மணிவரை நடந்ததாம். டாக்டர் அம்பேத்காரும் சென்றிருந்தாராம். ஜின்னு தாம் சொன்னதே சரியென்று சுருக்கமாய்ச் சொல்லி முடித்தார்!

சென்னையில் சர். கே. வி. ரெட்டி, எம். ஸி. ராஜா ஆகியோர் ஆதரவில் சென்னை ஜில்லா முஸ்லீம் லீக் இம் 'விமோசன தினம்' நடத்தியதென்ருல் அதன் வைபவத்தைப் பற்றி கேட்பானேன்? 'குடியரசு'ப் பாராயணம் நடந்தேறிற்ரும்!

இன்னும் பல ஊர்களில் நடந்ததாய்ச் சொல்லப்படுகிறது. சென்னை மாகாணத்தில்நடந்த விமோசனதினக் கூட்டங்களில் பீகார் காங்கிரஸ் சர்க்கார் குற்றஞ் செய்ததாகச் சொன்னார்கள். பீகாரில் சென்னை மாகாணக் காங்கிரஸ் சர்க்கார் குற்றம் புரிந்ததென்று சொன்னார்கள். இப்படியாக ஒவ்வொரு மாகாணத்திலும் அது நீங்கலாக பிற மாகாணக் காங்கிரஸ் சர்க்கார் மீதுதான் பழி சுமத்தப்பட்டது!

ஆகவே காங்கிரஸ் சர்க்கார் பேரால் குற்றம் ஏதாவது நடந்திருக்குமானுல் அது இம்மாகாணங்களில் இல்லையென்றேஏற்படுகிறது.

அப்படியானுல் குற்றம்புரிந்தவர்கள் எங்கே யிருப்பார்கள்?

வாசகர்கள் சொல்லித்தரக்கூடாது; ஜனப் ஜின்னு தாமாகவே கண்டுபிடிக்கட்டும்!

#### லண்டனும் சிரிக்கிறது

ஜனப் ஜின்னுவின் 'விமோசன தின' அறிக்கையை ஒரு 'விவஸ்தை கெட்ட' அறிக்கையென்று லண்டன் நியூஸ் கிராணிகள் பத்திரிகை இடித்துக் கூறுகிறது. அவருடைய ராயல் கமிஷன் விசாரணைக் கோரிக்கையைப் பற்றி "சைமன் கமிஷன்களும் உருப்படாக் கமிட்டிகளும் வட்டமேஜை மகாநாடுகளும் அவைகளால் ஏற்பட்ட தாமதமும் மறந்து போய் விட்டனவா? ஜனப் ஜின்னுவின் குற்றச் சாட்டுகளிலுள்ள உண்மையும் பொய்யும் டில்லிக்குத் தெரியும்" என்று உணர்த்துகிறது.

#### அமெரிக்காவுக்குந் தெரியும்

இந்தியாவிலுள்ள நெருக்கடியைப் பற்றிப் பிரிட்டிஷ் பத்திரிகைகள் இந்தியர்கள் மீது குற்றத்தைச் சாட்டின போதிலும், அமெரிக்காவிலிருந்து லண்டனுக்கு வரும் பத்திரிகைகள் உண்மையை வெட்ட வெளிச்சமாக்குகின்றன. இந்தியாவிலுள்ள வகுப்புப் பிரச்னையை அவைகளும் வெளிப்படுத்துகின்றன. என்ருலும் "வகுப்புப் பிரச்னையைக் காட்டி பிரிட்டன் இனியும் பொறுப்பாட்சி தரக் காலந்தாழ்த்த வேண்டிய அவசியமில்லை" என்று கூறுகின்றன.

#### அமெரிக்க 'டைம்'

உதாரணமாக, அமெரிக்காவின் பிரபல 'டைம்' என்ற பத்திரிகை எழுதியிருப்பதாவது:

1917-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில், பிரிட்டிஷாருக்குத் துணையாக இந்தியத் துருப்புகள் ஜர்மெனியுடனும் துருக்கியுடனும் இராஜ விசுவாச நெறி தவருமல் நீண்டநாள் யுத்தம் புரிந்து உதவியதைப் பாராட்டி, அப்போது இந்தியா மந்திரியாயிருந்த எட்வின் மாண்டேகு பார்லிமெண்ட் சபையில் "இந்தியாவில் பொறுப்பாட்சி ஸ்தாபனங்கள் வளர்ச்சியடைய பிரிட்டிஷ் சர்க்கார் துணைபுரியும்" என்று கூறினார்.

ஆனுல் இதில் ஓர் இடத்தில் விஷம் வைக்கப்பட்டிருந்தது. வளர்ச்சியடைகிற காலத்தையும் வளர்ச்சியின் அளவையும் பிரிட்டன்தான் நிர்ணயிக்க வேண்டும். குடியேற்ற நாட்டந்தஸ்தை நோக்கி வைக்கிற ஒவ்வொரு அடியை எப்போது, எவ்வளவு தூரத்துக்கு வைக்கலாம் என்பதை பிரிட்டனே நிச்சயிக்கலாம்.

எவ்வளவோ காலமாகிவிட்டது. வளர்ச்சியின் அளவு மிக மிகச் சொற்பம். இந்தியா சாம்ராஜ்யமாகத்தானிருக்கிறது. அதனுடைய சாம்ராஜ்யச் சக்ரவர்த்தி பிரிட்டனிலிருக்கிற மன்னர்.

#### மகாநாடுகள் மகாநாடு

வருஷா வருஷம் டிசம்பர் கடைசி அல்லது ஜனவரி ஆரம்பத்தில் மகாநாடுகளுக்குக் குறைவே இருக்காது.

அகில இந்திய ஹிந்து வாலிபர்கள் மகாநாடு கல்கத்தாவில் டிசம்பர் 31ல், பாய் பரமானந்தர் தலைமையில் கூடும்.

அகில இந்திய மாணவர் பெடரேஷன் மகாநாடு ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் தலைமையில் ஜனவரி 1,2 தேதிகளில் நடைபெறும்.

வருடாந்திர எல். ஐ. எம். மகாநாடு சென்னைப் பூந்தமல்லி ஹைரோட்டிலுள்ள இன்டியன் மெடிசின் கவர்ன்மெண்ட் ஸ்கூலில் டிசம்பர் 29 முதல் 3 நாட்கள் நடைபெறும். ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் திறந்து வைப்பார்.

அகில இந்திய வருணாஸ்ரம தரும சுயராஜ்ய சங்க மகாநாடு விரைவில் கல்கத்தாவில் கூடப்போகிறதாம். ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் இதற்குத் தலைமை வகிக்க ஒப்புக்கொண்டிருக்கிருர்.

ஸ்ரீ ராமசாமி நாயக்கர் எந்த சநாதன தரும மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கப் போகிருர் என்கிற விபரமும் ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் அடுத்தாற்போல் தலைமை வகிக்கப்போகிற கூட்டம் சுயமரியாதைக் கூட்டமா அல்லது முஸ்லீம்லீக் கூட்டமா என்ற விபரங்களும் கிடைக்கவில்லை.

#### சர் ராமசாமி முதலியார்

சென்ற 20-ந் தேதி புதன் கிழமையன்று சர் ஏ. ராமசாமி முதலியார் தம் மனைவி சகிதமாய்ப் பழநிக்குச் சென்று, மலையுச்சியில் சுவாமி தரிசனம் செய்து பிரசாதம் பெற்றுக்கொண்டு கோவை சென்றனர். ஸ்ரீ முதலியாருக்குக் கடவுள் பக்தியில்லையென்று ஸ்ரீ நாயக்கர் நினைப்பது தவறு.

—

## டிரங்க் டெலிபோன்

### கட்டண விகிதமாற்றம்

யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து 'டிரங்க் டெலிபோன் கால்' அதிகரித்து மிகுந்த சிரமம் ஏற்பட்டிருப்பதால், இந்திய சர்க்கார் சில மாறுதல்களைச் செய்ய முடிவிட்டிருக்கிறது.

அதாவது தந்தி விஷயத்தில் 'எக்ஸ்பிரஸ்' என்றும் 'சாதாரண'த் தந்தி என்றும் இரு பிரிவுகள் இருப்பதைப் போல டிரங்க் டெலிபோனிலும் ஏற்படுத்தப்படும். 'எக்ஸ்பிரஸ்' என்பது 'அர்ஜெண்ட்' தந்தி.

டிரங்க் டெலிபோனில் உடனே அவசரமாகப் பேசவேண்டியவைகளை 'அர்ஜெண்ட் பிரைவேட் இன்லண்ட் டிரங்க் கால்ஸ்' என்று சொல்லப்படும். இப்படிப்பட்ட 'அர்ஜெண்ட் கால்'களுக்கு மற்றெல்லாச் 'சாதாரணமான கால்'களுக்கு முன்பு இடமளிக்கப்படும். இதற்குள்ள கட்டண விகிதம் சாதாரணமாகவுள்ள 'காலுக்கு'க் கொடுப்பதைப்போல் இரட்டிப்பு.

இன்னும் ஒரு மாறுதல். தற்போது பாதிக் கட்டண விகிதத்தை ஏற்றுக்கொள்ளுகிற நேரம் குறைக்கப்படுகிறது. அதாவது இரவு 8 மணிக்கு மேல் காலை 8 மணிக்குள் பாதிக் கட்டண விகிதம் அனுமதிக்கப்படுகிறதல்லவா, இந்த நேரம் 1940 ஜனவரி முதல் தேதியிலிருந்து இரவு 10 மணிக்கு மேல் காலை 6 மணி வரையில் தான் என்று மாற்றப்படுகிறது.

யுத்த நெருக்கடியை முன்னிட்டு இம் மாறுதல் செய்யப்பட்டிருப்பதால், மீண்டும் பழைய நிலைமை ஏற்படும் போது பழைய விகிதமே ஏற்படுத்தப்படும்.

## ராம்கார் காங்கிரஸ்

### பிரதிநிதிகள் தேர்தல்

தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ எம். டி. தியாகராஜ பிள்ளை, ராம்கார் காங்கிரஸ் பிரதிநிதித் தேர்தல் சம்பந்தமாகவும் ஜில்லா தாலுகா நகர காங்கிரஸ் கமிட்டித் தேர்தல் சம்பந்தமாகவும், கீழ்க்கண்ட தேதி மாற்றத்தை அறிவிக்கிருர்.

நாமினேஷன் தாக்கல் செய்வதற்குக் கடைசி தேதி: ஜனவரி 5 (மாலை 6 மணிக்குள்); பரிசீலனை: ஜனவரி 6; நாமினேஷன்களை வாபஸ் வாங்குவதற்குக் கடைசி தேதி: ஜனவரி 7 (மாலை 3 மணிக்குள்); அபேட்சகர்களின் முடிவான ஜாப்தா பிரசுரம்: ஜனவரி 7 (மாலை 6 மணி). தேர்தல் தேதி: ஜனவரி 7 முதல் 21 வரை.

## பின்லாந்தின் உயிர்நாடி

பின்லாந்துக்கும் ருஷ்யாவுக்கும் நடக்கிற யுத்தத்தில் பின்லாந்தின் வடபாகம் அவ்வளவு முக்கியமானதல்ல. அதாவது பெட்சாமோ வடகோடியில் இருக்கின்றது; பெட்சாமோவிலிருந்து பலமைல் களுக்கு ருஷ்யத் துருப்புகள் தெற்கே வந்து விட்டாலும் கூட, பின்லாந்துக்கு அவ்வளவு பாதகமில்லை. ஆனுல் பின்லாந்தின் தென்கோடியில் லடோகா ஏரிப்பக்கத்தைத்தான் பின்லாந்து முக்கியமாய்ப் பாதுகாக்க வேண்டும். அதன் உயிர்நாடி வைபுரி என்ற இடந்தான். லடோகா ஏரியிலிருந்து தெற்கிலிருந்தும் வடக்கிலிருந்தும் வருகிற 2 வழிகள் இங்கே வைபுரி என்ற இடத்தில்தான் சந்திக்கின்றன. இதை ருஷ்யா கைப்பற்றி விட்டால், பிறகு ஹெல்சிங்கியைப் பாதுகாப்பது துர்லபம்.

பின்லாந்தின் தென்பகுதியிலே தான் நிறைய ஊர்கள் இருக்கின்றன. ஜன நெருக்கடி அதிகம். இரயில்வேக்களும் முக்கிய ஸ்தாபனங்களும் இங்கேயுள்ளன. வடக்கேயுள்ள 'நிக்கல்' சுரங்கங்களுக்கு ஒரு மோட்டார் ரோடு ஒன்றைப் போட்டிருக்கிருர்கள். பின்லாந்தில் நீரின் வேகத்தால் மின்சார சக்தியைப் பெறுகின்றனர்.

## சென்னை மேல்சபை தேர்தல்கள்

சென்னை மேல்சபை (கவுன்சில்) தேர்தலுக்காக தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்துக்குத் தேர்தல் மனுக்கள் அனுப்பப்படும் தேதி 30ந் தேதிவரை நீடிக்கப்பட்டிருக்கிறது.

* *

பண்டித நேரு, பாஞ்சாலத்திலுள்ள அமிருதசரஸில் நடைபெறப் போகும் அகில இந்திய ஹிந்துஸ்தான் சாரணர் சங்கக் கூட்டத்துக்கு விஜயம் செய்யப்போகிருர்.

அலகாபாத் சர்வகலாசாலை மண்டபத்தில் ஜனவரி 2-ல் நடக்கவிருக்கும் இந்தியப் பொருளாதார மகாநாட்டைப் பண்டிதநேரு திறந்துவைப்பார்.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியகலும் மணம்மலர ஊழியமே எற்றிட் டேனல்

பிரமாதி-ஞு மார்கழி-மீ - 13உ (28—12—39) வியாழன்

## சிதம்பரனர்க்குச் சிலையெடுப்பு

சென்னைக் காங்கிரஸ் மாளிகையில் சிதம்பரனுர்க்கு, கடந்த வாரம்
சிலையெடுப்பு நடந்தேறியது. சிதம்பரனுர் யார் எனப் பழய
காங்கிரஸ்க்காரர் நன்ருக அறிவர். இன்று எல்லோரும்
தேசபக்தர் என வெளிவருதல் எளிது. சிப்பாய் ஒருவனைக்
கண்டால், அஞ்சி ஓடி ஒளிந்த அந்தக் காலத்தில்—வந்தேமா
தரம் என்று வாயால் சொல்லவும் பயந்து நடுங்கிய அந்
நாளில்-ஆங்கில அரசியலைப்பற்றி மேடையேறி வாய்திறக்க
நடுநடுங்கிய பழய காலத்தில், ரத்தம் கொதித்து—சுதந்தர
வெறிபிடித்து-எதற்கும் அஞ்சாது—அறிவுற்று—தீவிழித்து-
உறுமி— குகையினின்றெழுந்து—பெரு முழக்கம் செய்த
ஓரிய சிங்கம் நமது சிதம்பரனுர். ஒரு சர்வ சாதாரணமான
மிகச் சிறு அதிகாரி, தமக்குமேல் எதுவுமே இல்லையென
நினைத்து ஆட்சிபுரிந்த காலமது. அந்நாளிலும் "வ. உ.
சிதம்பரம் பிள்ளை" யென்ற பெயர் கேட்டவுடன், பெரிய அதி
காரிகளும் அச்சங்கொண்டனர் என்ருல் சிதம்பரனுர் வீரம்
செப்புந் தரத்ததோ !

இந்நாளில் தேசபக்தர் மலிவு. தேசபக்தி இருக்குமோ,
இராதோ, அதுவேறு. தேசபக்தர் என நடித்தால் அதற்
கொரு மதிப்பு நாட்டில் இருக்கிறதல்லவா? திருநீறு இடுபவன்
சிவபக்தன் என்ற கொள்கை பரவியவுடன் அதுகொண்டு
தம் தீச்செயல்களை மறைக்க முற்படுவார் மல்கியதுபோல,
தேசபக்தி என்ற போர்வைபூண்டு பலப்பலர் இன்று புறப்
பட்டிருக்கின்றனர். அந்தநாள் அப்படிப்பட்டதல்ல. தேச
பக்தரை மதிப்பவர்கூட அன்று அரியர். 'அம்மாடி ! வெள்
ளைக்காரனுக்கு விரோதமா? பைத்தியம்!' என்று நாடு
கூறிய காலம் அது. அன்று பிறர் ஆட்சியின் தீமையை
உணர்ந்து வெளிக்கிளம்பிய தமிழ்க் கோளரி சிதம்பரனுர்.
"உடல், பொருள், ஆவி; உடல், பொருள், ஆவி" என்ற பல்ல
வியை வீணுக எல்லோரும் பாடுகின்றனர். உண்மையில்
உடலையும் பொருளையும் ஆவியையும் நாட்டின் பொருட்டு
வருத்திக்கொண்டது சிதம்பர மடங்கல்.

சிறைசெல்ல லட்சக்கணக்கானவர் தயங்காமையை
இன்று காண்கின்றேம். அன்றைய நிலைமை யென்ன?
சிறை செல்வது குறைவு என ஊன சமூகம் கருதியது ஒருபுற
மிருக்க, இன்றையச் சிறை வாழ்வுக்கும் அன்றையச் சிறை
வாழ்வுக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா? அந்தக் காலத்தில்
சிறையில் 'பி' வகுப்பும் 'ஏ' வகுப்பும் அதற்மேல் தனி வகுப்
பும் கனவில்கூடத் தோன்ருதன; யாராக இருந்தாலும்
எல்லாரும் புளிச்சாற்றில் குழைத்த வெண்சோற்றுக் கட்
டியோ, அல்லது கேப்பைக் கூழ் வராட்டியோ தின்னும்
ஒரே வகுப்புத்தான். படித்தவர்—சிறந்த ஓர் அறிஞர்—நல்
லின்ப வாழ்வு வாழவல்லவர், அவ் வாழ்வு மேற்கொண்டனர்
என்ருல் அவரைச் சிலையெடுத்து வணங்காது என்னதான்
செய்வது! அவர் மறைந்து இவ்வளவு காலங்கடந்தேனும்
தமிழருக்கு அவருக்குக் கல்நாட்டும் நினைவு வந்தது மகிழ்ச்சிக்
குரியதே.

சிதம்பரனுர் சிறையிருந்த அந்நாளில் சிறைக்கூடங்கள்
தேசபக்தர் கூட்டத்தால் நிரம்பியிருக்கவில்லை. நம்மவர் பலர்
கூடிவிட்டால் இருப்பது சிறையாயினும் அங்கு நடப்பது
அநேகமாக நமது ராஜ்யமாகவே இருக்கும். அன்பர் சிதம்ப
ரனுர் தனியாராய்ச் சிறையிருந்தார். சில மாதங்கட்குள்ளே
எப்படி வெளியேறலாம் என்று நினைந்து என்னென்னவோ
செய்வோரெல்லாங்கூடத் தலைவர்களாக இன்று விளங்கு
கின்ருர். சிதம்பரனுர் பல ஆண்டுகள் துணையின்றிச் சிறை
கிடந்தார். அங்கு அவர்பட்ட துன்பம் கொஞ்சமல்ல. வெளி
யில் ஈட்டிய பொருள்வருவாய் துறந்து சிறைக்குள் உடலை
வருத்தி ஆற்றமுடியாத வேலைகளெல்லாம் செய்து உயிர்
ஊசலாடும் நிலையில் பல ஆண்டுகள் கிடந்தார் சிதம்பரனுர்.

"செக்குமாடுகள் போல் உழைத்து ஏங்குகின்ருர் அந்தக்
கரும்புத் தோட்டத்திலே" என்று தோட்டத் தொழிலாளர்
துயர்கண்டு கண்ணீர் விட்டுக் கதறினர் கவி பாரதியார்.
செக்கு மாடுகள்போல் அல்ல; செக்குமாடாகவே உழைத்தார்
சிதம்பரனுர். சிறையில் செக்கை இழுத்தார் சிதம்பரப் பெரி
யார். "மெய்யறம்" என்னும் அறநூல் எழுதிய கை, செக்கை
இழுத்தது! சிறையில் அன்று சிதம்பரனுர் போன்ற சீரியார்
சிந்திய ரத்தத்தில் முளைத்த விதைதான், கன்ருகி, மரமாகி,
நாடுமுழுமையும் கிளைகளால் படர்ந்து, பூத்து, காய்த்து இன்று
பழுக்கும் பக்குவ நிலைமையில் இருக்கின்றதென்ருல் விதை
யூன்றிய நன்றி மறக்கத் தக்கதோ !

அன்பர் சிதம்பரனுர், "துன்பமென்னும் கடலைக் கடக்கும்
தோணி"யாக விளங்கிய, லோகமான்ய பாலகங்காதர தில
கரின் நல்வழி பற்றி யொழுகியவர். 1907-ம் ஆண்டு
சூரத் நகரத்தில் நடந்த காங்கிரஸ் மகாசபையை
மிதவாதிகள் கையினின்றும் பிடுங்கத் திலகர்பிரான் செய்த
முயற்சியில் உறுதுணையாக இருந்த தமிழர் சிதம்பரனுர்.
தூத்துக்குடிக் கடலில் ஆங்கிலக் கம்பெனிக்குப் போட்டியா
கப் பழய நாளில் கப்பலோட்டிய பெருமை சிதம்பரனுரின்
தனியுரிமை! சிதம்பரனுர் நல்ல தமிழ் அறிஞர். திருக்குற
ளில் அவருக்குப் பேராராய்ச்சி யுண்டு. பாட்டிலும் நடையி
லும் பல நூல்களை அவர் எழுதியிருக்கின்ருர். தமிழர் எந்
நாளும் மறக்கமுடியாத நாட்டுப்பணியை அன்பர் சிதம்பரனுர்
செய்திருக்கின்ருர். அவர் புகழ் ஓங்குக.

## இடி முழக்கம்

### பாமர மக்களிடம் சொல்லுவோம்

வார்தாவில் 25-ந் தேதி நிகழ்ந்த நாகபுரிக் காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில், ராஷ்ட்ரபதி ராஜன்பாபு காங்கிரஸின் வரலாற்றைக் கூறி, தற்போதுள்ள வகுப்புப் பிரச்னையிலுள்ள சிக்கல்களை விளக்கினுர். முஸ்லீம் தலைவர்களுடன் நடத்திவந்த சமரசப் பேச்சு வெற்றியளிக்காததால், பாமரர்கள் முன் இப் பிரச்னையைக் கூறி ஒரு முடிவுக்குவர எண்ணியிருப்பதாய் வெளியிட்டார். இத்தகைய எண்ணம் பண்டித நேருவுக்கும் நீண்ட நாட்களா யுண்டு. பாமர மக்கள் இவ் வகுப்புப் பிரச்னையை விளங்கிக் கொள்வார்களானுல் சமரஸம் ஏற்பட்டே தீரும் என்பது உறுதி. ஏனெனில், பாமரமக்கள் இப் பொதுப் பிரச்னையைச் சுயநல நோக்குடன் ஆராயமாட்டார்களல்லவா? ஆயினும் அவர்களுடைய தீர்ப்புக்கு விடுமுன், தீவிரமான பிரசாரத்தைத் தேசமெங்கும் தொடர்ந்து சில மாதங்களேனும் நடத்தியாகவேண்டும். ஜனுப் ஜின்ஞ முஸ்லீம்களின் ஏகப்பிரதிநிதி என்பதைக் காங்கிரஸ் எக்காலத்திலும் ஒப்புக்கொள்ளவில்லை. ஏகப் பிரதிநிதியாய்க் கொள்ளாமல் அவரையும் ஒரு பிரதிநிதியாய்க் கருதி எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சி பலனளிக்காததால், முஸ்லீம்கள் கிறிஸ்துவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் ஆகியவர்கள் சகலரு மடங்கிய மக்கள்முன் இப் பிரச்னையைக் காங்கிரஸ் விளக்கி தீர்த்துக் கொண்டால், அதன் பலன் அசைக்க முடியாத பலங்கொண்ட தேச ஒற்றுமையாகவே விளங்கும்.

### பெயரில் என்ன இருக்கிறது?

பாஞ்சால சநாதனதருமப் பிரதிநிதி சபையிலிருந்து மகாத்மாவுக்கு ஒரு கடிதம் எழுதப்பட்டிருக்கிறது. அதில்,

> பாஞ்சாலத்திலுள்ள சநாதனிகளாகிய நாங்கள் ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேச உரிமை வழங்க வேண்டுமெனப் பிரசாரம் புரிகின்றேம். இதற்கு அகில இந்திய சநாதன தருமப் பிரதிநிதி சபை பரிஷத்திலிருந்து அதிகாரம் பெற்றுள்ளோம். எங்கள் ஸ்தாபனத்தில் 600 கிளைகளும் 300 மகாவீர தளங்களும் உள்ளன. இம் மாகாணத்திலுள்ள எங்களிடையே ஹரிஜனங்களுக்குத் தேவதரிசனம் மறுக்கின்ற சநாதனியே கிடையாது. நீங்கள் ஹரிஜன ஆலயப்பிரவேச சம்பந்தமாக, சநாதனிகளின் மனப்பான்மையைக் கண்டித்துச் சீர்திருத்த முற்படும் போதெல்லாம், நீங்கள் கண்டிக்கிற சநாதனக்கூட்டத்தில் நாங்களும் உள்ளிட்டவர்களென்ற எண்ணம் இங்கே நிலவுகிறது. சநாதன தருமத்திலே ஹரிஜன ஆலயப்பிரவேசந் தடுக்கப் படவில்லை. ஆகையால் இவ்வுரிமையை வழங்க மறுக்கின்றவர்களுக்கு வேறு ஏதாவது பெயரிட்டுச் சொல்லுங்கள்.

என்று எழுதியிருக்கிருர். மகாத்மா அவருக்கு எழுதியுள்ள பதில் இவ்வார ஹரிஜனில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. தாம் சீர்திருத்த விரோதிகளையே அவ்வாறு குறித்ததாயும், பாஞ்சால சநாதனிகள் தம் நிலைமையைத் தெளிவாக்கிக் கொள்வது எளிதென்றும் கூறிவிட்டார். பாஞ்சால நிருபர் 'சநாதனி' என்ற சொல்லினுல் ஏற்படுகிற விபரீதத்தைச் சொல்லும்போது உலகத்தில் இதுபோல் நடைபெற்றுக் கொண்டிருக்கிற எண்ணரிய செயல்கள் நம் நினைவுக்கு ஓடிவருகின்றன. ஜர்மெனியில் நடக்கும் ஹிட்லரின் ஆட்சிமுறைக்கு 'நேஷனல் சோஷலிஸ்ட் கவர்மெண்ட்' என்றுதான் பெயர். இப்போது இந்தியாவில் நடக்கும் ஆட்சி முறையைப் பிரிட்டிஷார் ஜனநாயகம் என்கிருர்கள்! மாகாணங்களில் இன்று நடக்கிற கவர்னர் ஆட்சியும் ஜனநாயகத்தை அடிப்படையாய்க்கொண்ட ஆட்சியென்றே சொல்லப்படுகிறது. பின்லாந்தின் மீது படையெடுத்து யுத்தம் புரிந்தாலும் கூட 'பிறர் மீது ஆதிக்கஞ் செலுத்தக் கூடாதென்கிற மார்க்ஸிஸத் தத்துவத்தைக் கொண்டதுதான் ருஷ்யா' என்று ஸ்டாலின்துரை கூறுகிருர். சகோதரத்துவத்தை அடிப்படையாய்க் கொண்ட இஸ்லாமின் தத்துவத்தை ஜனுப் ஜின்ஞ துவேஷத்தை வளர்ப்பதற்காகப் பயன்படுத்தப் பார்க்கிருர். ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டும்படி உபதேசித்த ஏசுநாதரைப் பின்பற்றும் ஒரு மத வழிபாட்டினர்தாம் இன்று ஒருவர்க்கொருவர் அடித்துக்கொண்டு மடிகின்றனர். பெயரில் என்ன இருக்கிறது!

---



## யுத்தச் செய்திகள் :

**ஸ்டாலின் பிறந்ததின விழாப் பரிசு—குருடர் பள்ளிக்கூடத்தில் குண்டு போட்டனர்—பின்னிஷ் தொழிலாளர் ஸ்தலங்கள் துவம்சம்—ருஷ்யப்படைகள் சளைத்தன—பின்லாந்தைவிட்டு ருஷ்யா சேர்ந்தபின்னும் ஓடுகின்றனர் !—ஹிட்லரின் ஏற்பாடுகள் — பொதுவுடைமைவாதிகளும் குடியரசுவாதிகளும்.**

மேற்குப் போர்முனை சுத்தமோசம். அதில் சரியானபடி யுத்தம் மூள மாதக் கணக்கில் ஆகுமாம். தள்ளுங்கள்; இப்படித் தள்ளிப்போடுகிற விஷயம் நமக்கு வேண்டாம்.

பின்லாந்து நல்ல தேசம். அது வெகு ஜோராக யுத்தம் புரிகிறது. கடைசியில் வெற்றி தோல்வி எப்படி யாவது ஆகட்டும். வெற்றியும் தோல்வியும் வல்லரசுகள் கையில் தானிருக்கின்றன. அவை பார்த்துத் தம் சௌகரியப்படி வெற்றியைத் தோல்வியாக்கும்; தோல்வியை வெற்றியாக்கும்!

ஆனுல் பின்லாந்து தன் கடமையைத்தான் இப்போது செய்கிறது. தன் தேசத்துக்குள் புகுந்த ருஷ்யச் சோவியத் பட்டாளங்களை அது விரட்டி விரட்டியடிக்கிறது. இப்படி விரட்டியடிக்கும்போது, லீக்சா என்ற பிரதேசத்தில் பின்னிஷ் துருப்புகள் ருஷ்யப் பட்டாளங்களைத் தம் எல்லைக்கு அப்பால் துரத்திய தோடல்லாமல், ருஷ்ய எல்லைக்குள் புகுந்து, அவற்றை வெகுதூரம் வரை கொண்டு போய் விட்டு வந்தனவாம்!

ஆம். ருஷ்யா வழிகெட்டுப் பின்லாந்துக்குள் பிரவேசித்தது. ஆகையால்தான் பின்னிஷ் துருப்புகள் சோவியத் செஞ்சேனைப் படைகளை அவர்களுடைய நாட்டுக்குள்ளேயுஞ் சென்று தாக்கித் துரத்தினர்.

இன்னும் பல இடங்களிலே ருஷ்யப் பட்டாளங்கள் முறியடிக்கப்படுகின்றன. ருஷ்யாவுக்கு ஏராளமான சேதம். ஆனுல் ருஷ்யாவின் ஜனத்தொகை 16 கோடி. பின்லாந்தின் தொகை காலே அரைக்கால் கோடிதான். அதாவது 38 லட்சம் மக்களேயிருக்கின்றனர். பாவம் பின்லாந்து!

### தலைவரும் மாண்டார்

சென்றவாரம் 'கிராப் ஸ்பீ' கப்பலின் பரிதாபகரமான முடிவைப் படித்திருப்பீர்கள். கப்பல் தலைவர் லாங்ஸ்டார்ப் தம் கப்பலை மூழ்கடித்துக் கொண்டபின் தாமும் போனஸ் அயர்ஸ் சென்று அங்கு தற்கொலை புரிந்து கொண்டார். அவர் சாகுமுன் ஒரு கடிதம் எழுதிவைத்திருந்தார். கப்பலிலுள்ளவர்களைக் கரை சேர்த்து, கப்பலை மூழ்கடித்தபின் தாம் தற்கொலை புரிந்துகொள்வதென ஏற்கனவே முடிவு செய்திருந்தாராம். பிரிட்டிஷ் பத்திரிகைகளும், இன்னும் ஜர்மெனியைத் தவிர பிற தேசப் பத்திரிகைகளும், ஹிட்லருக்கும் லாங்ஸ்டார்ப் போன்ற கப்பல் தலைவர்களுக்கும் அபிப்பிராய பேதம் உண்டென்று கூறுகின்றன.

ஆனுல் லாங்ஸ்டார்பின் பிரேதம், தரையில் விரிக்கப்பட்டிருந்த ஒரு ஜர்மானியக் கொடி மீது இருந்ததாம். தலையில் ரிவால்வாரின் குண்டு ஒன்று தைத்திருந்ததாம்.

அவ்வளவுதான். பிறகு அர்ஜென்டைன் கப்பற்படையினர் தக்க மரியாதைகளுடன் பிரேத அடக்கம் செய்தார்களாம்.

### ஜர்மெனி ஓய்கிறது

ஜர்மெனி சென்ற வாரத்தில் அதிக பிரிட்டிஷ் கப்பல்களை மூழ்கடிக்கவில்லை. இதற்குக் காரணத்தை நம்மால் கூறமுடியாவிட்டாலும் கிராப் ஸ்பீ மூழ்கியது, லாங்ஸ்டார்ப் மாண்டது, இரயில் விபத்துக்கள் ஏற்பட்டுப் பலர் மாண்டது ஆகிய துக்கத்தில் ஹிட்லர் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிருர்போலிருக்கிறது.

தம்முடைய நிலைமையே மோசமாக இருக்கின்ற இத் தருணத்தில், ஸ்டாலின் தம்முடைய துருப்புகள் பின்லாந்தில் மாட்டிக்கொண்டிருப்பதால் அவைகளுக்கு ஏதேனும் உதவி புரியவேண்டுமென்று ஹிட்லரைக் கேட்டதாகவும் ஒரு செய்தி.

இயற்கையாகவே பைத்தியக்காராயுள்ள ஒருவரும், சிலவேளைகளில் மட்டும் பைத்தியக்காரராக ஆகிவிடுகிற இன்னொருவரும் சேர்ந்தால் என்ன ஆகும்? உலகத்திலுள்ள எவராலும் இதற்கு முடிவு சொல்ல முடியாது. பலவிதமான அதிசயங்களும் அதிர்ச்சிகளும் சம்பவிக்கும். ஹிட்லர் ருஷ்யா மீது கிளம்பினுலும் கிளம்புவார்; வாசகர்கள் இம்மாதிரியான செய்திகளையும் ஏற்கத் தயாராக இருக்கவேண்டும். வீண் பேச்சல்ல. பிரிட்டன் எவ்வளவுதான் ஜர்மெனியுடன் யுத்தம் புரிந்தாலும், இத்தாலி நடுநிலைமை வகித்தாலும் ருஷ்யாவுடன் ஜர்மெனி சேர்ந்திருப்பதை சிறு நாடுகள் முதற்கொண்டு சகிக்க மாட்டா. ருஷ்ய-ஜெர்மென் ஒற்றுமையைக் குலைத்துவிடுவதில் சகல ஐரோப்பிய நாடுகளும் ஒத்துழைக்கும். ருஷ்யா எப்போதும் பிரித்து வைத்தே பேசப்படும்.

### கோலம்பஸ்

இது ஒரு ஜர்மானியக் கப்பல் இதுவும் தன்னைத்தானே மூழ்கடித்துக் கொண்டது. மூழ்கடித்துக் கொண்ட கப்பல்களின் ஜாப்தாவை நீங்கள் சரிவர வைத்துக் கொண்டிருந்தால் இதுவரை 23 கப்பல்கள் மூழ்கடித்துக்கொண்டன என்ற செய்தியும், மொத்தம் 1,40,000 டன் என்ற விபரமும் புலப்படும்.

நேச தேசங்கள் பிடித்த கப்பல்கள் மொத்தம் 19. எடை 88,000 டன்.

### ஹிட்லரின் ஏற்பாடுகள்

ஜர்மெனி ஏராளமான யுத்த விமானங்களையும், சப்மரின்களையும், இதர யுத்த தளவாடங்களையும் செய்து கொண்டிருப்பதாகவும், மார்ச் மாத வாக்கில் கடும் யுத்தத்தைத் தொடுக்கப் போவதாகவும் சுவிடனுக்குச் செய்தி எட்டியிருக்கிறதாம். சுவிடனிலிருந்து ஜர்மெனிக்கு இரும்பு ஏற்றிச் செல்வதால் இது உண்மையாயிருக்கக்கூடும்.

சீக்பிரீட் அரணைத் தெற்கே இன்னும் நீட்டி, ரைன் நதியை ஒட்டி கான்ஸ்டன்ஸ் ஏரிவரை அமைக்கப் போவதாக லண்டனில் உண்மையாகவே தெரிகிறதாம்.

### பெல்ஜியம்

பெல்ஜியத்தின் மீது ஜர்மென் யுத்த விமானங்கள் சாதாரணமாகப் போவதும் வருவதுமாயிருக்கின்றன என்றே புலனுகிறது. அடிக்கடி பெல்ஜியம் இதைப்பற்றி ஜர்மெனிக்கு ஆட்சேபித்தும், யுத்த விமானங்கள் தன் எல்லையில் வருவது நிற்கவில்லையாதலால் 21-ந் தேதி பெல்ஜிய விமானிகள் சில ஜர்மென் விமானங்களைச் சுட்டனர்.

### ஹாலந்து

ஹாலந்துமீதும் இப்படி அதே நாள் விமானப் போர் நடந்தது. ஆனுல் ஹாலந்து விமானிகளுக்குத் தாம் எந்த தேச விமானிகளுடன் சண்டை போடுகிறேமென்று அடையாளம் தெரியவில்லையாம். நல்லவேளையாக எதிரிகள் ஹாலந்து விமானிகள் அல்லர்! உட்ரெக்ட் பக்கத்தில் இப்படி நடந்ததாம்.

### இந்திய லஸ்கர்கள்

சம்பள சம்பந்தமாகக் கைதியான எல்லா லஸ்கர்களையும் விடுதலை செய்யுமாறு பிரிட்டிஷ் சர்க்கார் உத்தரவிட்டது. இதில் 300 இந்திய மாலுமிகளும் சம்பந்தப்பட்டவர்கள்.

### பிரிட்டன்மீது எதிரிகள்

20உ பிரிட்டிஷ் கிழக்குப் பிரதேசங்களில் அடையாளந் தெரியாத எதிரிகளுடைய விமானங்கள் பறந்து வந்தன. பிரிட்டன் சேதமில்லை யென்கிறது. ஜர்மெனி ஒரு விமானக் கப்பலைச் சேதப்படுத்தினதாகச் சொல்லுகிறது.

### பிரேஞ்சுப் பொதுவுடைமை வாதிகள்

பாரிஸ் நகரத்திலும் இன்னும் சில ஊர்களிலுமிருந்த 100 பொதுவுடமை வாதிகளைப் பிரெஞ்சு சர்க்கார் 20உ கைதி செய்ததாம். 100 பேருக்கு மேலேயே யிருப்பார்களாம். பொதுவுடைமை வாதிகள் எல்லா நாடுகளிலுமே இருப்பார்கள் போலிருக்கிறது.

### பிரிட்டனில் கூட

பிரிட்டனில் 25உ லண்டன் சிறைச்சாலையில் 5 மணி நேரம் ஒரு கலகமே நடந்ததாம். கலகம் செய்தவர்கள் குடியரசு வாதிகளாம். அவர்கள் 3 வார்டர்களைப் பிடித்து, சிறையறைகளிலே போட்டு, அவர்களைத் தங்களுடைய கைதிகளைப்போல் அடைத்து வைத்திருந்தார்களாம்! சிறைச்சாலைக் கதவையும் தாளிட்டுக்கொண்டனர்! படுக்கைகள், மரச்சாமான்கள் ஆகியவற்றைக் கொளுத்தி குடியரசு கீதங்கள் ஸ்லோகங்கள் ஆகியவற்றைப் பாடினுர்களாம். போலீசார் பிறகு ரிவால்வர்களுடன் வந்து கேட்டின் இரும்பில் 'அசெட்டிலீன்' உலை வைத்து உருக்கி, உள்ளே நுழைந்துவிட்டார்கள். அப்போதும்கூட கலகம் செய்தவர்கள் ஒன்ருய்க்கூடிக் கொண்டு ஒரே அறையில் நின்று, பாட்டில்களாலும் ஆணிகள் நிறைந்த போர்டுகளாலும் தாக்கினர்.

பிறகு நெருப்பணைக்கும் இயந்திரம் வந்து, முகத்தில் தண்ணீரை யடித்து (சட்டமறுப்பு இயக்கத்தின்போது சென்னையில் செய்யப்பட்டதே அது மாதிரி) மூர்ச்சித்து விழச்செய்து கலகத்தை யடக்கினராம்.

### ருஷ்யாவும் பின்லாந்தும்

21உ பின்னிஷ் துருப்புகள் இரண்டு சோவியத் பட்டாளங்களை, ருவோமுசால்மி என்ற இடத்தில் நாசப்படுத்தின. சுமார் 20,000 ருஷ்யர் இறந்தனரென்று ஹெல்சிங்கி (பின்லாந்தின் பிரதானப் பட்டினம்) சொல்லுகிறது. உண்மையாயிருக்குமா? எப்படியோ போகிறது; மேலே பார்ப்போம்.

கரேலியன் பூசந்தியில் ருஷ்யர் நூற்றுக்கணக்கான டாங்கிகளைக் கொண்டு தாக்கினர். ஆனுல் பின்னிஷ் துருப்புகள் எதிர்த்து 20 டாங்கிகளைப் பிடுங்கி வைத்துக்கொண்டன. எல்லாவற்றையும் பிடுங்கிவைக்காமல் விட்டது பின்லாந்துமீது பிசகுதானே?

பெட்சாமோ துறைமுகத்துக்கருகில் (பின்லாந்தின் வடகோடி. நிறைய பனியிருக்கும்) பின்னிஷ் துருப்புகள் பின்வாங்கிவிட்டனர்

கரேலியன் பூசந்திக்கு அருகிலும் இதர இடங்களிலும் ருஷ்ய விமானங்கள் குண்டுகளைப் பொழிந்து பல உயிர்ச் சேதங்களை உண்டாக்கின.

### 21உ

ஹெல்சிங்கி மீது பலத்த விமானப் படையெடுப்பு நடந்தது. 3 ஆஸ்பத்திரிகள் சேதமடைந்தன. 12விமானங்கள் 30குண்டுகளை வீசின. குருடர் பள்ளிக்கூடத்திலும் குண்டு வீசப்பட்டது. 11 ருஷ்ய விமானங்களை 6 பின்னிஷ் விமானங்கள் எதிர்த்துச் சண்டையிட்டன.

தென் கடற்கரை பூராவிலும் விமானப் படையெடுப்பு நடந்தது. ஓடிக்கொண்டிருந்த இரு இரயில்வண்டிகள் மீதும் குண்டு போட்டனர்.

இவையெல்லாம் ஸ்டாலின் பிறந்த 21ந்தேதி தின விமரிசை வைபவங்கள்!

டெலிபோனையும் அறுத்துவிட்டனர். இவ்வளவு கூத்துகளும் நடந்திருக்க, பின்னிஷ் விமானங்கள் 21உ ருஷ்யாவின் லெனின்கிராட்-நகரத்தில் பறந்துவிட்டு வந்ததாயும், ருஷ்ய விமானிகள் பேசாமல் இருந்தனரென்றும் ரேடியோ மூலம் இத்தாலிசெய்தி பரப்பிற்று. எதை உத்தேசித்து இப்படி செய்யப்பட்டதென்று இன்னும் தெரியவில்லை.

22உ ஸ்டாலின் பிறந்த தின விழா வைபவத்தைக் கண்டபிறகு, பின்லாந்துக்குப் புது ஊக்கம் பிறந்தது. வடக்கேயும் வடகிழக்கிலும் ருஷ்யத் துருப்புகள் ஓடவாரம்பித்தன. அவர்கள் பிடித்த ஓட்டத்தைப் பின்னிஷ் துருப்புகளால் பிடிக்க முடியவில்லையாம்.

சீதோஷ்ண நிலைமை சரியாயில்லாததால் யுத்தத்தை நிறுத்தி ஒத்திவைத்துக்கொள்ளலாமா, என்ற யோசனை ருஷ்யாவுக்கு ஏற்பட்டது. இது நல்ல யோசனைதான். ஆனுல் யுத்த காலத்தில் நல்ல யோசனைப்படி எதுவும் நடப்பதில்லையல்லவா?

ஹெல்சிங்கியில் தொழிலாளர்கள் வசிக்கிற இடமாகத் தேடிப்பிடித்து, அந்த இடங்களிளெல்லாம் ருஷ்ய விமானிகள் குண்டு வீசினர். ஸ்டாலினுடைய மார்க்ஸிஸ மார்க்க நூலில் ருஷ்யத் தொழிலாளர்தான் உலகத்தை ஆளவேண்டுமென இருக்கிறதோ என்னவோ!

இதுவரை சுமார் 25,000 ருஷ்யர் இறந்ததாயும் 35,000 ருஷ்யர் காயமடைந்ததாயும் பின்லாந்து சொல்லுகிறது.

21உ மொத்தம் 350 ருஷ்ய விமானங்கள் பறந்ததாய்க் கணக்கெடுக்கப்பட்டது.

பின்லாந்தில் பின்னிஷ் பெண்கள் ஆங்காங்கு காவல் புரிகின்றனர்.

### ருஷ்யாவின் அறிக்கை

ருஷ்யா பின்னிஷ்தேசத்தைப்பற்றி, பின்லாந்து சொல்லுவதைப்போல் அவ்வளவு சொல்லாவிட்டாலும் 2200 பேர் கொல்லப்பட்டனர் என்றும், 10,000 பேர் காயமடைந்தனரென்றும், 1400 பேர் கைதி செய்யப்பட்டனரென்றும், 3000 துப்பாக்கிகள் 35 பீரங்கிகள் 300 இயந்திர பீரங்கிகள் பிடுங்கப்பட்டனவென்றும் சொல்லுகிறது.

எதிரிக்கு ஏற்பட்ட சேதத்தைப் பற்றித்தான் இரண்டும் வர்ணிக்கின்றனவே ஒழிய, தன் நஷ்டத்தைச் சரிவரச் சொல்லுவதில்லை.

23உ லீக்சாவுக் கருகில் ருஷ்யர் 22உ பிடித்த ஓட்டம் நிற்கவில்லை.

24உ இன்னும் ஓடுகிருர்கள்!

25உ ருஷ்யாவுக்குள் போய்ச் சேர்ந்தும்கூட ஓடிக்கொண்டிருக்கிருர்கள்!

ஆனுல் பின்லாந்தின் இதர பகுதிகளிலுள்ள ருஷ்யர் யுத்தம் புரிகின்றனர்.

## தமிழ் நாடு அரசியல் மகாநாடு

### ஆத்தூரில் நடக்கும் ஏற்பாடுகள்

41வது தமிழ்நாடு அரசியல் மகாநாட்டின் விளம்பர அதிகாரி பின்வருமாறு அறிவிக்கிறார்:

செங்கற்பட்டுக்குச் சமீபத்திலுள்ள ஆத்தூர் என்ற இடத்தில் நடைபெறவிருக்கும் மாகாண அரசியல் மகாநாட்டில் மாஜி விவசாய மந்திரி ஸ்ரீ. வி. ஐ. முனிசாமிபிள்ளை கொடியேற்றி வைக்க சம்மதித்திருக்கிறார். ஜனவரி மாதம் 26ந் தேதி நடைபெறவிருக்கும் இந்த வைபவமும், சுதந்திர தினத்தின் கொடியேற்று விழாவும் சேர்ந்தாற்போல நடைபெறும். காரியக் கமிட்டியின் உத்திரவின் பிரகாரம் ஜனவரிமாதம் 26ந்தேதிய சுதந்திர தினமும் மகாநாட்டின் பந்தலிலேயே கொண்டாடப்படும். இந்த சுதந்திர தின வைபவத்துக்கு தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் அக்ராசனர் ஸ்ரீ. பி. ராமசாமி ரெட்டியார் (எம். எல். ஸி.) தலைமை வகிப்பார். ஜனவரி மாதம் 26ந்தேதி யன்று விஷயாலோசனைக் கமிட்டியின் கூட்டம் நடைபெறும்.

27ந் தேதி மத்தியானம் மகாநாட்டின் கூட்டம் நடைபெறும். அன்று காலை அக்ராசனர் ஊர்வலம் நடைபெறும். ஊர்வலத்தில் நாதஸ்வர வித்வான் திருவெண்காடு ஸ்ரீ. பி. சுப்பிரமண்யம் நாதஸ்வரம் வாசிக்க இசைந்துள்ளார்.

மகாநாடு நடைபெறும் சமயத்தில் முதியோர் கல்வி மகாநாடு ஒன்றை நடத்தவும் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. குடிசைத் தொழில் கண்காட்சி சாலையொன்றையும், கதர் கண்காட்சி சாலையொன்றையும் நடத்திவைக்க ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன.

ஆத்தூரில் வேம்பகம் பங்களாவுக்கு சமீபத்திலுள்ள ஒரு மைதானத்தில் இந்த மகாநாடு நடைபெறும். அங்கு பந்தல், ஷெட்டுகள் அமைப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

ஜனவரி 25ந்தேதியிலிருந்து 31-தேதி வரை குறைந்த கட்டணங்களில் டிக்கட்டுகள் கொடுக்கும்படியாக எஸ். ஐ. ஆர். கம்பெனியை நாங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறோம். பிரதிநிதிகளில் விஷயாலோசனை கமிட்டியின் மெம்பர்கள் மட்டுமே ஜனவரி மாதம் 26உ யன்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். மற்றப் பிரதிநிதிகள் எல்லோரும் 27ந் தேதி காலை எதிர்பார்க்கப் படுகிறார்கள். அவர்களின் தங்கு மிடத்துக்கும் ஆகார வசதிக்குமான தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. அந்தந்த இடங்களிலிருந்து இந்த மகாநாட்டிற்கு வரும் பிரதிநிதிகளின் எண்ணிக்கை முதலிய விவரத்தை அந்தந்த காங்கிரஸ் கமிட்டிகள் முன்கூட்டியே அறிவித்து விடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

## திருச்சி ரேடியோ

### டிச. 28-உ வியாழன்

5-20 திருப்புனித் துறை விஸ்வநாத பாகவதர்-வாய்ப்பாட்டு, 6-30 முடிகொண்டான் வி. வெங்கட்ராம ஐயர்-வாய்ப்பாட்டு, 7-15 பாணம் வி. டி. ராஜேஸ்வரன், 7-50 ஆர். ராஜேஸ்வரி-வாய்ப்பாட்டு, 8-30 முடிகொண்டான் வி. வெங்கட்ராம ஐயர் வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள் 9-45 பட்டமங்கலம் சாம்பசிவய்யர்-வீணை.

### 29-உ வெள்ளி

5-20 திருவீழி மிழலை கோவிந்தராஜ பிள்ளை சகோதரர்கள்-நாகசுரம், 6-30 ஸ்ரீமதி டி. என். மாணிக்கம் வாய்ப்பாட்டு, 7-15 'ரயிலில் நடந்த ஒரு நாடகம்' ஏ. வி. சுந்தரம் எழுதியது. 7-50 திருவீழிமிழலை கோவிந்தராஜ பிள்ளை சகோதரர்கள்- 8-45 ஸ்ரீமதி டி. என். மாணிக்கம்-வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள், 9-45 திருச்சி கே. வி. ஜெயராமையர் பிடில்.

### 30-உ சனி

5-20 மாஸ்டர் டி. விஸ்வநாதன் புல்லாங்குழல், மாஸ்டர் டி. ரங்கநாதன்-மிருதங்கம்; 6-30 ஸ்ரீமதி பாலசரஸ்வதி-வாய்ப்பாட்டு, 7-50 மதுரை மணிஐயர்-வாய்ப்பாட்டு, 8-45 ஸ்ரீமதி பாலசரஸ்வதி-வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள். 9-45 ஆர். என். தம்பி-வீணை.

### 31-உ ஞாயிறு

5-20 ஸ்ரீமதி டி. வி. சுசிலா வாய்ப்பாட்டு, 6-30 டி. கே. பாலகணேசய்யர்-புல்லாங்குழல், 7-15 'இன்னும் வெளிவர வேண்டிய புஸ்தகங்கள்' என்பது பற்றி டி. கே. சிதம்பரநாத முதலியார் பேசுவார், 7-50 டி. எஸ். கிருஷ்ணய்யங்கார்-வாய்ப்பாட்டு, 8-30 ஸ்ரீமதி ஜெயம்மாள்-வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள், 9-45 டி. கே. பாலகணேசய்யர்.

### ஜன. 1-உ திங்கள்

5-20 பி. எஸ். வீருசாமி பிள்ளை நாகசுரம், 6-30 பி. நாராயணசாமி பிள்ளை, வாய்ப்பாட்டு, 7-15 1940 விசேஷ நிகழ்ச்சி 7-50. பி. எஸ். வீருசாமி பிள்ளை நாகசுரம்- 8-30 ஸ்ரீமதி கே. கொச்சம்மாள்-வாய்ப்பாட்டு 9-20 செய்திகள், 9-45 ஸ்ரீமதி கே. கொச்சம்மாள்.

### 2-உ செவ்வாய்

5-20 கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை-வாய்பாட்டு, 6-30 வி. கோவிந்தசாமி நாய்க்கர்-பிடில், 7-15-'மல்லிகை' ராஜகோபால் பிள்ளை பேசுவார் 7-50 ஸ்ரீமதி ஜி. சென்னம்மா-வாய்ப்பாட்டு, 8-30 கே. ராதாகிருஷ்ண பிள்ளை வாய்ப்பாட்டு, 9-20 செய்திகள் 9-45 ஸ்ரீமதி ஜி. சென்னம்மா வாய்ப்பாட்டு.

### 3-உ புதன்

5-20 ஏ. கே. கணேச பிள்ளை வாய்ப்பாட்டு, 6-30 எல் ஆர். நீலமேகம் பிள்ளை-பிடில் 7-15 'மீட்கப்பட்டது' ஒரு தமிழ் நாடகம் ஆர். வாசுதேவ-சர்மா எழுதியது. 7-50 ஏ. கே. கணேசபிள்ளை வாய்ப்பாட்டு, 8-30 திருநெல்வேலி சங்கரகோபாலன் புல்லாங்குழல் 9-20 செய்திகள் 9-45 டி. சங்கரன்-வாய்ப்பாட்டு.

வங்க மந்திரி சபையிலிருந்து ராஜீநாமாச் செய்த ஸ்ரீ என். ஆர் சர்க்காரை மகாத்மா காந்தி பாராட்டி "நீங்கள் தேசாபிமானமுள்ள ஒரு காரியத்தைச் செய்ததாக நினைக்கிறேன்" என்று ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்.

## சென்னை ரேடியோ

### டிச. 28-உ வியாழன்

4-0 டி. எஸ். கிருஷ்ண அயங்கார்வாய்ப்பாட்டு, 5-20 கும்பகோணம் ராஜமாணிக்கம்பிள்ளை பிடில், 6-45 நவ்யகால பிலிம் ஆர்க்கெஸட்ரா— வாய்ப்பாட்டு 9-30 கும்பகோணம்— ராஜமாணிக்கம்பிள்ளை-பிடில்.

### 29-உ வெள்ளி

4-0 திருக் கோகர்ணம் ஆர். ராஜகோபாலன்-வாய்ப்பாட்டு, 5:20 டி. கிருஷ்ண மூர்த்தி வாய்ப்பாட்டு, 6-45 டி. கிருஷ்ண மூர்த்தி-வாய்ப்பாட்டு, 7-0 அரசியல்வாதி, தமிழ்ப்பேச்சு, 7-50 டி. கே. பட்டம்மாள் வாய்ப்பாட்டு, 8-15 'ரேடியோ' வைத்தியம்' ரத்னமும் சர்மாவும் எழுதியது. 9-25 ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள்-வாய்ப்பாட்டு, 9-45 ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள்-வாய்ப்பாட்டு.

### 30-உ சனி

5-20 'சித்திராங்கி' ஒரு தமிழ்நாடகம் வி. ஆர் முனிசாமிநாயுடு எழுதியது. 6-45 கே. வி. ராஜாராம் ஐயர்-புல்லாங்குழல், 7.50 பாலக்காடு ராமபாகவதர்-வாய்ப்பாட்டு,

### 31-உ ஞாயிறு

4-0 ஸ்ரீமதிகள் ஆர். கமலாவும், நீலாவும்- வீணை, 5-20 மாயவரம் ஆர். சுப்ரமண்யபிள்ளை-நாகசுரம், 7-0 தமிழ் நாவல் தொடர் ஸ்ரீ வ. ரா. எழுதியது. 7-50 ஸ்ரீத்வாரம் வெங்கடசாமி நாயுடு-பிடில்.

### ஜன. 1-உ திங்கள்

4-0 பி. வி. சிதாராமன்-வாய்ப்பாட்டு, 5-0 கீரனூர் சகோதரர்கள்-நாகசுரம், 7-0 இன்றைய தலையங்கம் (தமிழ்) 7-50 ஜி. என். பாலசுப்ரமண்யன்-வாய்ப்பாட்டு- 9-45 ஸ்ரீமதி மீனாக்ஷி ராமகிருஷ்ணன். வாய்ப்பாட்டு.

### 2-உ செவ்வாய்

4-0 எஸ். பி. பார்த்தசாரதி வாய்ப்பாட்டு, 5-20 கே. கோபாலசாமி செட்டி-வாய்ப்பாட்டு, 6-45 தமிழ் ஹாஸ்ய நாடகம் 'அந்தரங்கம்' ஜி. ராமச்சந்திரன் எழுதியது. 7-0 இன்றைய தலையங்கம் (தமிழ்) 7-05 எஸ். ஆர். வெங்கடேசனும் ஸ்ரீமதி கே. வி. ஜானகியும் இருவர்பாடும் இசைப்பாட்டு, 7-50 ஆர். கே. வெங்கட்ராமசாஸ்திரி பிடில், 8-30 ஸ்ரீமதி டி. ஞானம்பாள்-வாய்ப்பாட்டு,

### 3-உ புதன்

5-20 வி. எஸ். ரத்னசாமிப் பிள்ளை-வாய்ப்பாட்டு, 6-05 ஸ்ரீமதி கே. பி. நாராயணி பாய் வாய்ப்பாட்டு, 7-50 தமிழ் நாடகம் 'ப்ரஹ்லாத விஜயம்' என். எஸ். ராமச்சந்திரன் தயாரித்தது-அரியக்குடி ராமானுஜய்யங்கார்-ஹரி, மாஸ்டர் டி. கே. ஜெயராமன் ப்ரஹ்லாதன், 9-30 வி. ஜே. வர்மா-புல்லாங்குழல்.



## நேமத்தான் பட்டி

### திருநாவுக்கரசு வித்தியாசாலை அதிபர் பிறந்ததின விழா

19-12-39உ மாலை நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலை அதிபர் ஸ்ரீ சி. வீ. நா. பழனியப்ப செட்டியார் பிரமாதி ஆண்டு பிறந்ததினவிழா வித்தியாசாலை ஆசிரியர்கள் மாணவ மாணவிகள் சார்பாகக் கொண்டாடப்பெற்றது. அதிபர் குடும்பத்தினரை இல்லத்திலிருந்து ஆசிரியர்களும், மாணவ மாணவிகளும் அன்பர்களும் நாதசுரம் பியாண்ட் முதலிய வாத்தியங்களுடன் ஊர்வலமாக அழைத்துவந்தனர். தேவகோட்டை திரு டி. ஜி. இராமசாமி அய்யங்கார் தலைமை வகித்தார். மாணவர்கள் 'பீமார்ச்சுன' (பாஞ்சாலி சபதம்) உடற்கூற்று வண்ணம் (பட்டினத்தார்) சாரணர் படகு, கும்மாளம் (திரு தேசிகவிநாகம் பிள்ளை பாடல்) இவைகளை உணர்ச்சி ததும்ப நடித்து எல்லோரையும் மகிழ்வித்தனர். பாரத புத்திரி ஒருவர் தோன்றி பாரதவீரர்கட்கு ஊக்கமூட்டிய காட்சி போற்றற்குரியதாக இருந்தது. மாணவிகளின் கோலாட்டமும், 'அப்பர் இசையரங்கத்தின்' இன்னிசைக் கானங்களும் நடைபெற்றன.

'என் கடன்பணி செய்து கிடப்பதே' எனும் உயர்ந்த பொருள் குறித்து பண்டித மு. முத்து வேங்கடாசலமய்யர் அப்பர் பெருமான் ஆண்டவனிடம் அன்பு கொண்டு உழவாரப் படைதாங்கி, சிவசின்னந்தரித்து, சிவத்தொண்டு புரிந்ததை இனிமையான சந்தத்துடன் பல பாடல்கள் பாடி சொற்பொழிவாற்றினர்.

அதிபருக்கு திருவாளர்களான சு. ஆண்டியப்பாவும், இராம நாகப்பாவும் வாழ்த்துப்பாக்கள் பாடிக்கொடுத்தார்கள். திரு. பெ. வெ. சிதம்பரம் சில உபசார வார்த்தைகள் கூறினர். தலைவரவர்கள் முடிவுரை கூறியதும் வித்தியாசாலை தலைமை ஆசிரியர் எஸ். தங்கவேல் அனைவருக்கும் நன்றி கூறினர்.

### சுதேச சித்த வைத்திய சங்கம்

இச்சங்கத்தின் சார்பில் 21-12-39உ வியாழக்கிழமை மாலை எஸ். எம். எஸ். ஹைஸ்கூல் மேன்மாடியில் மதுரை ஆடிட்டர் ஸ்ரீ வி. கிருஷ்ணய்யர் தலைமையில் சித்த வைத்தியப் பிரசாரக்கூட்டம் நடைபெற்றது. டாக்டர்கள் சின்னையா கோவிந்தராஜலு ஆகியோரும் ஸ்ரீ ராமனுதசாஸ்திரியும் சித்த வைத்தியத்தின் மேன்மை 'வைத்தியர்களின் கடமை மூலிகையின் மேன்மை' என்பனபற்றியும் விரிவுரை நிகழ்த்தினர்கள். ஸ்ரீ ராம. அழகப்பா வந்தனோபசாரம் கூறினர்.

### பெற்றோர் சங்கம்

முத்துப்பட்டினம் புதிய முனிசிபல் பாடசாலை பெற்றோர் சங்கத்தின் மாதக் கூட்டம் சென்ற 21-12-39 மாலை சங்கத் தலைவர் ஸ்ரீ மெ. சு. தி. தண்ணீர்மலையான் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

தலைவர் தலைமையில் கைத்தொழிற் பயிற்சியின் அவசியத்தையும் கிண்டர் டார்டன் போதன முறையின் மேன்மையையும் மற்றும் பெற்றோர்களில் எவ் வெவ்வகைகளில் ஆசிரியர்களுடன் ஒத்துழைப்பதில் அவர்தம் குழந்தைகளுக்கு ஏற்படும் விசேஷ பலன்களையும் எடுத்துக்கூறினர்.

பின்னர் ஸ்ரீ ஆ. வி. லெ. அருணசலம் செட்டியார் பேசினர்.

அடுத்த கூட்டம் 18—1—1940ல் நடைபெறுமென அறிவிக்கப்பட்டது.





காந்தியடிகளின் ஹரிஜன் கட்டுரை

# நாணயத்தைச் சுண்டிவிட்டுப் பூவா தலையா பார்ப்பது

## ஜர்மானியரும் உலக மக்களே

### நம்பிக்கை முதலா பகுத்தறிவு முதலா ?

★

யுத்தம் பற்றி தம்முடைய நிலையை விளக்கி மகாத்மா காந்தி இவ்வாரத்திய "ஹரிஜன்" பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். ஒரு மேல்நாட்டு நண்பர் எழுதிய கடிதத்திற்குப் பதிலளிக்கையில் இது சம்பந்தமாகக் கூற நேரிட்டது.

மேற்படி 'மேல்நாட்டு நண்பர்' தாம் எழுதிய கடிதத்தில் கூறியுள்ளது வருமாறு:-

"அடிமையாக்கப்பட்டும், ஒடுக்கப்பட்டவர்களுமான நாம் ஜெர்மனி ஜெயிக்கும்படி விடுவதற்கில்லை. இந்த சமயத்தில் அதைத் தடுக்க நமது பங்கு வேலையைச் செய்ய நாம் மறுப்பதின் மூலம் அதன் விளைவாக ஏற்படும்பலன்களுக்குள்ள பொறுப்பிலிருந்து, சன்மார்க்க வகையில் நாம் தப்புவதற்கில்லை எனக் கவலையுறுகிறேன்"

இதற்கு மகாத்மா காந்தி வருமாறு பதிலளிக்கிறார்:

மூட நம்பிக்கை என்று கூட சொல்லலா மென்றாலும், இந்த மாதிரியான ஒரு பழைய விஷயத்தைத்தான் நான் பின்பற்றிக்கொண்டிருக்கிறேன். எந்த வழியில் போனால் தன்மார்க்க வழியாகாதென்ற ஒரு விஷயத்தில் எனக்குச் சந்தேகம் ஏற்படின் ஒரு நாணயத்தைச் சுண்டி விட்டுப் பூவா தலையா போட்டுப் பார்ப்பது போல், நான் தெய்வம் காட்டுகிற வழிப்படி நடக்கிறேன். எனக்கு வேறு சாஸ்திரீகமான முறை யெதுவும் கிடையாது. கடவுளுக்குக் கடைசி அதிகாரத்தை அளிப்பதானது என்னுடைய அபிப்பிராயத்தில் ஒரு சாஸ்திரீகமான முறை யென்றே கருதுகிறேன். இந்த நெருக்கடியான சமயத்தில்கூட நான் ஒரு தினுசான பூவா தலையா ஆட்டத்தைத்தான் மேற்கொண்டேன். என் இஷ்டப்படி காரியங்கள் நடந்திருந்தால் என்ன நடந்திருக்குமென்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் இது நிகழவில்லை. காங்கிரஸ் வழியும் தன்மார்க்க வழியல்ல; சன்மார்க்க ரீதியில் அது மேற்கொள்ளக்கூடிய ஒரே வழியும் அதுதான். அதனால்தான் நானும் காங்கிரஸுடன் கலந்தேன். என்னுடைய சொந்தத் திட்டத்தில் இருந்ததான அஹிம்சா தர்ம வழியை முன்னணிக்குக் கொண்டுவருவதே என்னுடைய நோக்கமாக இருந்தது; இப்போதுமிருக்கிறது. காங்கிரஸ்மேற்கொண்ட வழியானது நீங்கள் கூறிய வியாக்கியானம் கூறப்பட இடம் கொடுத்தது. ஆனால் அதை நான் ஒரு நிபந்தனையாகக் கருதவில்லை. அது ஒரு பூவா தலையா ஆட்டம். பிரிட்டிஷார் கருத்து பரிசுத்தமானதுதானென்றால் நாங்கள் போரில் மூழ்குகிறோம் எனக் காங்கிரஸ் கூறுகிறது.

இவர்கள் கருத்து பரிசுத்தமானதுதானவெனச் சோதிக்க, இந்த பிரிட்டிஷார் இந்தியா விஷயமாக என்ன மனப்பான்மை கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய வேண்டியதே. அது பரிசுத்தமானதுதானென்றால் வெற்றியானது முடிவில் பலவானுக்கு ஏற்படாமல், பலமான தர்மம் அல்லது இயக்கத்திற்கு ஏற்பட வேண்டுமென்பதற்காக, கடவுள் காங்கிரஸைப் பிரிட்டன் பக்கம் சேரச் சொல்லுகிறார் என்பது தெளிவாகத் தெரியும். நீங்கள் விரும்புவதெல்லாம் ஏற்கனவே பிரிட்டனுக்குக் கிடைத்து விட்டன. தங்கு தடையின்றி ஆளும் பணமும் பிரிட்டனுக்குக் கிடைக்கின்றன.

பலாத்காரத்தையே காங்கிரஸ் விரும்பாது என வைத்துக்கொள்ளுவோம். அப்படியானால் பலாத்கார அம்சமாக காங்கிரஸிடமிருந்து ஏதாவது வருமெனப்பிரிட்டன்பயப்படவே வேண்டியதில்லையே. யோசிக்க யோக்கியதையுள்ள ஒரே வழியென நான் கருதும் அஹிம்சா தர்ம வகையில் இதைப் பற்றி நாம் கருதினோமானால், பிரிட்டன் தன்னுடைய சன்மார்க்க நிலையைப் பற்றித் தெளிவாகக் கூறாத வரையில், பிரிட்டனுக்குக் காங்கிரஸ் ஆதரவளிப்ப தென்பது துன்மார்க்கமாகும்.

நாஜிஸம் பற்றி நீங்கள் கூறுவது போல நான் சட்டமாக எதுவும் கூறவில்லை. உங்களையும், என்னையும் போல ஜெர்மன் தேசத்தவர்களும் மனுஷ்யர்கள்தான். மற்ற 'இஸம்'களைப்போல நாஜிஸமும் இன்றைய பொம்மைதான். மற்றவைகள் அடைந்த கதிதான் இதுவும் அடையும்.

உங்களுக்கும், எனக்குமுள்ள வித்யாசத்தை நான் காண்கிறேன். மேல்நாட்டுக்காரரான நீங்கள் நம்பிக்கைக்கு பகுத்தறிவை அடிமையாக்க மாட்டீர்கள்; இந்தியனான நான் விரும்பினால்கூடநம்பிக்கையைப்பகுத்தறிவுக்கு அடிமைப்படுத்த முடியாது. நீங்கள் கடவுளைப் பகுத்தறிவைக் காட்டி வசியம் செய்ய முயற்சிக்கின்றீர்கள். நான் அவ்விதம் செய்யமாட்டேன். ஏனென்றால் கடவுள் தான் 5வது-அல்லது விஷயங்களை முடிவாகத் தீர்மானிக்கும் நாம் கண்டறியாத பொருள் எனக் கீதை கூறுகிறது

அறிவு விஷயத்தில்என்னதான் வித்யாசங்களிருந்தாலும் நமது ஹிருதயம் என்றும் ஒன்றுதான்; எப்போதும் ஒன்றுதான்.

## இராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கம்

21—12—39உ நடந்த மகாசபைக் கூட்டத்தில் ஸ்ரீ அரு. சோமையா பொதுக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## கொள்ளையடிக்கும் திட்டம்

(3-பக்கத் தொடர்ச்சி)

அபேதவாதத்தில் இந்த முறை கிடையாது. பணக்காரர்களிற் பலர் இந்த முறையை அடிக்கடி நமக்கு ஞாபக மூட்டிக்கொண்டே யிருக்கிறார்கள். அபேதவாதம், பொதுவுடைமை, சமதருமம் என்ற சொற்களில் ஏதேனுமொன்று அவர்களுடைய செவிகளில் பட்டுவிட்டால், 'பணக்காரர்களைக் கொள்ளையடிப்பதுதான் அந்தத் திட்டம்' என்கிறார்கள்.

வாஸ்தவத்தில் இப்படி ஒரு திட்டம் இருக்கிறதென்று அபேதவாதிகள் உட்பட எந்த அரசியல் பொருளாதார வாதிக்குந் தெரியாது. பணக்காரர்கள் இதை நினைவூட்டுவதால், இதையும் ஒரு திட்டமாகக் கொண்டு, இப்போதுள்ள முறையைமாற்றி, கொள்ளையடிக்கும் முறையை நிரந்தரமாக ஏற்படுத்திவிடலாமா என்று பார்ப்போம்.

பணக்காரர்கள் சொல்லுகிற இத்திட்டத்தை அபேதவாதிகளால் ஏற்றுக்கொள்ளமுடியாது. இப்போது வைஸ்ராய் இந்தியாவில் திடீரென்று ஒரு புதிய சட்டம் ஏற்படுத்தி, நாளை காலை 6மணி முதல் இதை அமுலுக்குக் கொண்டுவருவதாய் வைத்துக்கொள்வோம். இப்புதிய சட்டத்தில், 'இந்தியாவில் பிறந்த ஒவ்வொருவரும் அவர் அவர் இஷ்டப்படி இந்தியாவுக்குள் கொள்ளையடித்துக் கொள்ளலாம்' என்று கூறப்பட்டிருந்தால், நாளை காலை 8 மணிக்கு இந்தியா எப்படி இருக்குமென்று யாராலாவதுசொல்ல முடியுமா?

நமக்குள் ஒவ்வொருவரும் நம்முடைய தெருவில் யார் பெரும் பணக்காரரோ அவருடைய வீட்டைக் கொள்ளையிடத் திட்டம் போட்டுக்கொண்டு அதிகாலை $5\frac{3}{4}$ மணிக்கே கிளம்பிவிடுவோம். ஆனால் அப் பணக்காரருடைய இரும்புப் பெட்டியும் வீடும் $5\frac{1}{2}$ மணிக்கே கொள்ளையிடப்பட்டு வெறுமையாய்க் கிடக்கும். அல் அல்லது அந்த வீட்டுக்காரர் தம் சொத்துகளைப் பந்தோபஸ்துச் செய்துவிட்டு அவரைக் காட்டிலும் பணக்காரருடைய வீட்டைக் கொள்ளையிட ஒரு திட்டம் போட்டுக்கொண்டு புறப்பட்டிருப்பார்! இப்படி அவர் போய்க் கொண்டிருக்கும்போதே இன்னொருவன் வழிமறித்து உம்முடைய சொத்துகளெல்லாம் எங்கே? என்று அவரை அடித்து உதைத்துக் கொண்டிருப்பான். அல்லது உங்கள் வீட்டிலுள்ள அண்டான், குண்டான், செம்பு, தவலை ஆகியவற்றை ஒருவன் தூக்கிக்கொண்டு ஓடும்போது, நீங்கள் அடுத்த வீட்டுக்காரனுடைய துணிமணிகள் அல்லது ரேடியோவைத் தூக்கிக்கொண்டு நுழைய வருவீர்கள். உடனே நீங்கள் கையிலுள்ள சாமான்களைக் கீழே போட்டுவிட்டு உங்கள் செம்பைப் பிடுங்கிவைக்க அவனுடன் சண்டையிடுவீர்கள். பெண்களைக்கூட சாமான்களாகப் பாவித்துத் தூக்கிக் கொண்டு ஓடுவதையும் பார்க்க நேரிடலாம்! ஆகவே, கொள்ளையடிப்பதென்கிற நியதி ஒரு மணி நேரம் அமுலில் இருந்தால்கூட அந்த தேச மக்கள் ஒரு மணி நேரத்துக்குள் நாசந்தான். சந்தேகமே வேண்டாம். விபரம் தெரியாத ஒரு சில தீவிர வாதிகளுக்கு இது ஒரு வேடிக்கை போல, அல்லது ஒரு ஏழை இதை நினைத்து ஆறுதலடையப் பிரசார வார்த்தைகளாய்ப் பயன்படுத்தப் படலாமேயொழிய, இது எந்தக் காலத்திலும் நாடகத்தில் கூட நடத்திக் காட்டப் பட முடியாத விஷயம்.

பணக்காரர்கள் மட்டும்கொள்ளை யடிக்காமல் சும்மாயிருப்பார்களென்று நினைப்பது தவறு. உண்மையில், அவர்கள்கூட இரவு முழுதும் தூக்கம் விழித்து, கொள்ளையடிப்பதற்குரிய வழிகளைத் தேடக்கூடும். யார் சும்மா யிருப்பார்கள்? களவுக்கும் கொலைக்கும் கொள்ளைக்கும் உரிமையளித்து விட்டால் அதற்கு முடிவு ஏது? உடற்சாமர்த்தியமுள்ளவர்கள் பலஹீன மக்களைக் கொள்ளையடிக்க முற்படுவர் என்பது உண்மையே யானாலும், பணக்காரர்களுக்குத் தேகபலம் இல்லை யென்று சொல்ல முடியுமா? இதனால் சகல விபரீதங்களும் ஏற்பட்டு மக்கள் மடிந்துபோவர்என்பது உறுதி.

இன்னும் ஒன்று. எல்லோருக்கும் சமதேகவலிமை இருந்தால், பணக்காரர்கள் நினைக்கிற இக்கொள்ளைத் திட்டத்தை அபேதவாதிகள் கைக்கொள்வார்கள் ஆனால், இன்றைய உலகத்தில் ஒரு வேளைச்சோறு ஒழுங்காய்ச் சாப்பிட வழியில்லாமல், உடல் மெலிந்து, எலும்புக் கூடாய் நிற்கிறவனால் என்ன செய்ய முடியும்? கொள்ளையடிக்கும் திட்டம் ஏற்பட்டால், அவனுடைய குடிசையில் தான் தீ வைக்கப்படுமே ஒழிய, அவன் எந்தப் பணக்காரன் வீட்டில் நுழைந்து, இரும்புப் பெட்டியை உடைத்து, அதிலுள்ள பணத்தை மூட்டை கட்டிச் செல்லப் போகிறான்? கொள்ளையடிக்கும் திட்டம் ஏற்பட்டால் ஏழைகளுக்குச் சௌகரியமிருக்காது. பணக்காரர்களுக்கு ஏற்படுமென்று அவர்கள் நினைத்தால் அதையும் அபேதவாதிகள் ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. ஏனெனில் நாம் ஏழைகளைக் கொள்ளையடிக்க முற்பட்டால், நம் வீட்டுப் பிள்ளை குட்டிகளையும், கூன் குருடுகளையும், வயது முதிர்ந்தவர்களையுமாவது ஏழைகள் கொல்ல நினைப்பார்கள். கொன்றே விடுவார்கள்.

ஆகவே, அவனவன் திறமைக்குத் தக்கபடி தேடிக் கொள்வதென்பது வெறும் கொள்ளைதான். அதனால் ஏழைகளுக்கு நன்மை யேற்பட முடியாது. அபேதவாதிகள் இதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள்!

களவையும் கொள்ளையையும் சட்டப்படி நியாயமென்று ஏற்படுத்துவது எவ்வளவு தீதாய் முடியுமென்று பார்த்தோம். ஆனால் இன்றுள்ள வியாபாரத்திலும் தொழிலிலும் இக்காரியம் ஓரளவு நடைமுறையில் நடந்து கொண்டிருக்கிறது! ஒருவருடைய சாமர்த்தியத்துக்குத் தகுந்தாற்போல, எவ்வளவு பணம் வேண்டுமானாலும் அவர் சேர்த்துக்கொள்ளலாம். நாம் கல்லுக்கட்டிக்குச் சாமான் வாங்கப் போவதாய் வைத்துக்கொள்வோம். அங்குள்ள கடைக்காரர் எவரும் நம்முடைய சட்டைப் பையிலிருக்கிற ரூபாய் நோட்டைத் தெரியாமல் எடுத்துக்கொள்ளாவிட்டாலும், அவர் நம்முடைய ரூபாய் நோட்டைச் சகலரும் அறிகின்றாற்போல எடுத்துக்கொண்டு, அவர்இரக்கப்பட்டுக்கொடுக்கிறமிச்சத்தைத்தான் நாம் கொண்டு வரவேண்டியிருக்கிறது. நம் பணத்திலிருந்து அவருக்கு இஷ்டமான தொகையை அவர் எடுத்துக்கொள்கிறார். தற்போதுள்ள வியாபாரி எவ்வளவு வேண்டுமானாலும் அதிகமான பணம் எடுத்துக்கொண்டு, எவ்வளவு வேண்டுமானாலும் குறைந்த அளவு சாமானை நமக்குத் தரலாம். இது அறிவுக்குப் பொருத்தமாயில்லை. ஆனாலும் சட்டத்தில் இது கொள்ளை யென்றில்லை.

வக்கீல்கள் சொன்னதுதான் பீசு; டாக்டர்கள் அனுப்புகிற பில்லைக் கட்டுப்படுத்த என்ன இருக்கிறது? ஒரு கட்டடத்தின் மதிப்புக்கு மேலேயே வீட்டு வாடகை வாங்கப்படலாம். சட்டம் இடந்தருகிறது!

இப்படிப்பட்ட ஒழுங்கு முறை தவறிய காரியங்களால் ஏற்படுகிற தீங்கு அதிகரிக்கிறபோதே ஒரு புதிய சட்டம் ஏற்படுகிறது. அன்பை அடிப்படையாய்க்கொண்ட ஓர் அபேதவாத,-சம வருமான சம அனுபவப் பொருளாதாரத் திட்டம் ஏற்படுத்தப்பட்டால், அதிகப் பணம் சம்பாதிக்க முடியாது. சம்பாதித்தால், அதை என்ன செய்யமுடியும்?—சௌகரியங்கள் சகலவற்றையும் ஈவுபடுத்தி விட்டபின்!

ஆகையால் பணக்காரர்கள் சொல்லுகிற கொள்ளைத் திட்டத்தை நல்லதென்று கொள்ளமுடியாது. அதனால் ஏழைகளுக்கு நன்மையில்லை.

எனவே, அபேதவாதப் பொருளாதார முறை ஒன்றுதான் மிஞ்சுகிறது. இதன் தத்துவத்தை என்னாற் கூடியமட்டில் விளக்கி விட்டேன். தொழிற்சாலை, பெண்கள் நிலை, உலகத்திலுள்ள தேசங்களின் நடைமுறை, இந்தியாவுக்கும் இதர தேசங்களுக்குமுள்ள தொடர்பு ஆகியவற்றையே பாக்கியாக வைத்துக் கொண்டிருக்கிறேன்.

---

சாகர் கம்பெனியாரின் அலிபாபா படத்தை பம்பாய் சுப்ரீம் பிலிம் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் விநியோகிக்கத் தயாராயிருக்கின்றனர்.



### பஞ்சாங்கம்

1939 டிசம்பர்-ஜீ — பிரமாதி-ஸூ மார்கழி-ஜீ

| பர்மா. | இங் | தமிழ். | வாரம். | பிரமாதி-ஸூ இங்-1939. பர்மா-1301. |
|---|---|---|---|---|
| 3 | 28 | 13 | வியா | துவி-19-58. புன-5-41. அமிர்த யோகம். |
| 4 | 29 | 14 | வெள் | திர-15-0. பூச-2-32. மரணயோகம். |
| 5 | 30 | 15 | சனி | சது-9-35. மக-54-49. அ. சித்த யோகம். |
| 6 | 31 | 16 | ஞாயி | பஞ்-3-48. பூர-50-41. சித்த யோகம் |
| 7 | 1 | 17 | திங் | ஷப-52-14. உத்-46-41. மரண யோகம். |
| 8 | 2 | 18 | செவ் | அஷ் 46-53. அஸ்-42-59. சித்த யோகம். |
| 9 | 3 | 19 | புதன் | நவ-41-57. சித்-39-42. சித்த யோகம். |
| 10 | 4 | 20 | வியா | தச-37-47. ஸ்வா-37-9. அ. சித்த யோகம். |

### நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | | | ரெங்கூன் | | | பினங்கு | | | சிங்கப்பூர் | | | செய்கோன் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய மார்கழி | 29 | 0 | 6 | 3 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| தை | 29 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| மாசி | 30 | 0 | 6 | 6 | 0 | 4 | 6 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| பங்குனி | 31 | 0 | 6 | 6 | 0 | 4 | 9 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| பிரமாதி சித்திரை | 31 | 0 | 6 | 9 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| வைகாசி | 31 | 0 | 6 | 6 | 0 | 5 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆனி | 32 | 0 | 6 | 6 | 0 | 5 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆடி | 31 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆவணி | 31 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| புரட்டாசி | 31 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| அற்பசி | 29 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| கார்திகை | 30 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | | | | | | | | | |



காங்கிரஸ் காரியக் கமிட்டி

## அரசியல் நிர்ணய சபை அனைத்தையும் தீர்க்கும்

### சகலரும் ஒத்துழைக்க வழி

★

காங்கிரஸ் காரியக் கமிட்டி 22-௨ கீழ்க்காணும் தீர்மானத்தை நிறைவேற்றியது:—

"இந்தியா மந்திரி சமீபத்தில் விடுத்த அறிவிப்பைக் காரியக்கமிட்டி வருத்தத்துடன் பரிசீலனை செய்தது. அவர் வகுப்புப் பிரச்னையை பிரஸ்தாபித்திருப்பது, உண்மைப் பிரச்னையை மறைத்து, பிரிட்டிஷ் சர்க்கார் யுத்த லக்ஷியங்களை, குறிப்பாக இந்திய சுதந்திரம் சம்பந்தமாக அதன் லக்ஷியங்களை அறிவிக்கத் தவறிய முக்கிய அம்சத்திலிருந்து பொது ஜனங்களின் கவனத்தைத் திருப்புகிறது.

பல்வேறு கக்ஷிகள் மூன்றாம் மனுஷனின் தயவை நாடுகிறவரை—தேச நலனுக்குப் பாதகமாகக்கூட அந்த நபர் மூலம், விசேஷ சலுகைகளை யடையலாமென்று எதிர்பார்க்கும் வரை—வகுப்புப் பிரச்னை திருப்திகரமாகத் தீராதெனக் காரியக்கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. ஒரு தேசத்தின் மீது அந்நிய வல்லரசு ஆட்சி புரிவதென்றாலே, அந்த தேசத்திலுள்ளவர்களிடையே பிளவு உண்டாக்கப்பட்டிருக்குமென்றாகிறது. பல்வேறு வகுப்புகளிடையே ஒற்றுமை யேற்பட வேண்டிய அவசியத்தை காங்கிரஸ் மறைத்து வைத்ததே கிடையாது. காங்கிரஸ் ஒன்றுதான், தனது தேசீயத் தன்மையை நிலைநாட்ட ஒற்றுமைக்கு தொடர்ந்து முயற்சித்து வருகிறது. இந்த முயற்சி சில சமயங்களில் வெற்றியடைந்து மிருக்கிறது.

அந்நிய ஆட்சி அடியோடு வாபஸானால் தான் நிரந்தர ஒற்றுமை ஏற்படுமென்று காரியக் கமிட்டி திட்டமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறது. கமிட்டியின் சென்ற கூட்டத்திற்குப் பின் நடந்தவை, அந்த அபிப்பிராயத்தை ஊர்ஜிதம் செய்திருக்கிறது.

நாட்டிற்குள் சண்டை போடும் நபர்கள் இருக்கும் வரை இந்திய சுயராஜ்யம் நிலைத்திருக்க முடியாதென்பது காரியக் கமிட்டிக்குத் தெரியும்.

எனவே, பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரத்தை விட்டுக்கொடுக்க தயாராயில்லாததாலேயே இம்மாதிரி நடந்து கொள்கிறார்களென்ற முடிவுக்கு வர காரியக் கமிட்டிக்கு உரிமையிருக்கிறது.

#### அரசியல் நிர்ணய சபையே பரிகாரம்

காங்கிரஸ் கேட்கிறபடி அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதே, வகுப்புப் பிரச்னையில் இறுதி சமரசத்திற்கு வர ஒரே வழியாகும். அந்த சபைத் தேர்தலில், அவசியமான இடங்களில் மைனாரிட்டிகளுக்குத் தனித் தொகுதி மூலம் பூர்ண பிரதிநிதித்வம் அளிக்கலாம். சம்பந்தப்பட்ட மைனாரிட்டிகள் திருப்தி யடையும்படி அவர்களுடைய உரிமைகள் பாதுகாக்கப் படுமென்றும், அபிப்பிராய பேதங்கள் ஏதேனு மிருந்தால் அதை பக்ஷபாதமற்ற—கோர்ட்டின் தீர்ப்புக்கு விட்டு விடலாமென்றும் காங்கிரஸ் சார்பாக ஏற்கனவே விளக்க பட்டிருக்கிறது.

கஷ்டமான வேலைகள் செய்தாலொழிய சுயராஜ்யத்தைப் பெற முடியாதென்பதைக் காங்கிரஸ்காரர்கள் உணருகிறார்கள். காங்கிரஸ் அஹிம்ஸையையே மேற்கொள்ளுவதென பிரதிக்ஞை செய்துகொண்டிருப்பதால் அது இறுதியில் கையாளக் கூடியது சட்ட மறுப்புத்தான். சட்டமறுப்பு, சத்யாக்ரஹத்தில் ஒரு பகுதியாகும். சத்யாக்ரஹம் என்றால், எல்லாரிடத்திலும், விசேஷமாக நமது எதிரிகளிடத்தில் நல்லுணர்ச்சி காண்பிப்பதென்றாகும். எனவே, நல்லுணர்ச்சி ஏற்படும் படியும், நல்லுணர்ச்சி அபிவிருத்தியாகும் படியும் செய்யவேண்டியது ஒவ்வொரு காங்கிரஸ்காரரின் கடமையாகும். அஹிம்ஸை, நல்லுணர்ச்சி, சவுஜன்ய உறவு, பொருளாதார அபிவிருத்தி இவற்றின் சின்னமாக கதர் திட்டத்தை மேற்கொண்டு, அது வெற்றியடையுமாறு செய்வது அத்யாவசியமாகும். எல்லா காங்கிரஸ் ஸ்தாபனங்களும், நிர்மாண வேலைத் திட்டத்தை இன்னும் ஜரூராக நடத்துவதின் மூலம், போர் முரசு கேட்டதும் யுத்தத்திற்கு வர தங்களுக்கு யோக்யதாம்சம் இருப்பதை நிரூபிக்க வேண்டும்."

## லேடீஸ் கிளப் அங்கத்தினர் முறையீடு

### பால்ய விவாக மறுப்புச் சங்கம் கவனிக்குமா?

"காரைக்குடியில் சில மாதங்களுக்கு முன் தனவணிகர் சமூகத்தில் ஒரு வயோதிகருக்கு 13 ஆண்டு நிறையப் பெறாத ஒரு பெண்ணை மணஞ் செய்விக்கப்பெற்று இரண்டு மாதம் ஆவதற்குள் அப்பெண் விதவையாக்கப் பட்டிருக்கிறாள் என்ற செய்தி தாங்களும் அறிந்தே இருப்பீர்கள். மேற்படி பெண்ணுக்குத் தாயார் இறந்து போனார் என்றும் தந்தையார் இருக்கிறார் என்றும் தெரியக்கிடக்கின்றது. ஷை தந்தையாரும் சில சுற்றத்தார்களும் விண்ணுலகஞ் சென்ற, மணமகனுமாகப் பலர் கூறிய அறிவுரைகளைமீறி இத் திருப்பணியை நிறைவேற்றி ஒன்றுமறியாப் பச்சிளஞ் சிறுமியை விதவையாக்கி வைத்திருக்கிற கொடுஞ் செய்கை கண்டிக்கற்பாலது. இப்பகுதியில் தங்கள் சங்கத்தின் உயரிய பிரசாரத்தினால் பெரிய பெரிய செல்வாக்குடையவர்கள்கூட சட்டத்தை மீறிய கல்யாணங்கள் செய்யக்கனவிலும் நினையாதிருக்கிற நாளில் சில அறிவீனர்கள் கண்மூடித்தனமாக வரம்பு மீறிய செயல்கள் செய்ய முன் வருவது வருந்தற்குரியது. சாரதாச் சட்டப்படி இந்தப் பெண்ணுக்கு 14 வயது ஆனபின்னர் மணஞ்செய்ய இருப்பின் விதவையாகச் செய்திருக்க முடியாதன்றோ? இத்தகைய செயலுக்கு நல்லுள்ளம் படைத்தவர்கணெஞ்சம் எவ்வளவு துயரமடையும் என்பதைச் சொல்லவா வேண்டும்? இக்கூற்றுக்கு முழுப்பொறுப்பாளி அறியாமை நிறைந்த இப்பெண்ணின் தந்தையே யாகும். ஆனதால் சட்டம் மீறிக் கல்யாணஞ் செய்த குற்றத்திற்குத் தக்க நடவடிக்கை எடுத்து அன்னார் தண்டிக்கப்படவேண்டியதற்கு ஆவன செய்யுங்கள். தான் பெற்ற மகள் விதவையாகியிருக்கிற நிலைமையில் குடிகொண்டிருக்கும் வருத்தத்துடன் தகப்பன் தண்டனைக்குள்ளாகலாமா? என்று இரக்கப்பட்டு இதை மேல் நடத்தாமல் விட்டுவிடாதீர்கள். தாக்ஷண்யமின்றிய நடவடிக்கையினால் இனியாவது இப்படிக்கொத்த தீமைகள் நடவாமற் செய்தல்கூடும். 50 வயது 60 வயதுக் கிழவர்களுக்கெல்லாம் பெண் கொடுக்க முன் வரும் பெற்றோர்கள் உண்மையில் பெற்றோர்கள்தாமா? உயிர்குடிக்கும் இயமன்களேயாகும். நூற்றுக்கணக்கான சங்கங்களும் ஆயிரக்கணக்கான சீர்திருத்த இளைஞர்களும் நிறைந்து விளங்கும் இப்பகுதிகளில் ஆணுக்கொரு நீதியும் பெண்ணுக்கு வேறு நீதியும் வழங்கிவரும் கொடிய செயல் ஒழிக்கப்படவில்லையென்றால்வெட்கமாயில்லையா? ஆடவர் எத்தனை மணம் வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். ஒன்றுமறியாத சின்னஞ் சிறு கிளிமொழிகளுக்கு மறுமணம் செய்ய அனுமதிப்பது கிடையாது. வெறும் ஆரவாரம் செய்வதிலும் அனுதாபங் காண்பிப்பதிலும் ஒரு பிரயோஜனமுமில்லை. ஒவ்வொரு சீர்திருத்த இளைஞரும் சிறிதுகூடத் தயக்கமின்றி இத்தகைய தீமைகளை ஒழிப்பதற்கு முன்வரவேண்டும். தியாகம் செய்யாமல் அறியாமையை வெல்லமுடியாது. ஊக்கமும் ஊழ்வலியும் உண்மையில் பற்றுமிக்க பேராண்மையாளர்கள் நிறைந்த தங்கள் பால்ய விவாக மறுப்புச் சங்கம் நீடூழி வாழ்ந்து பொருத்தமற்ற மணங்கள் நடைபெறாதவாறு செய்து கொண்டிருக்கவேண்டுமென்று கடவுளை வேண்டிக்கொள்வதோடு மேற்கண்ட சட்ட விரோதமான கல்யாணத்திற்கு ஆவனசெய்ய முன் வரும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்" என்று லேடீஸ் கிளப் மெம்பரில் ஒருவர் எழுதுகிறார்.



அரசியலமைப்பு பற்றி சர் குவையர்

## ஒரு சில பிரதிநிதிகளே கூடிப் பரஸ்பரமாய் முடிக்கவேண்டும்

### ஒற்றுமையே முக்கிய விஷயம்

★

இந்தியாவின் பிரதம நீதிபதி சர் மாரிஸ் குவையர் 23௨ காசி சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழாப் பிரசங்கம் புரிந்தபோது அரசியல் நிர்ணயசபை பற்றிக் கூறியதாவது:

கானடா, ஆஸ்திரேலியா, தென் ஆப்ரிக்கா ஆகிய நாடுகளின் அரசியலமைப்புகள் எப்படி தயாரிக்கப்பட்டனென்பதைத் தெரிந்துகொள்வதின் மூலம் நலனடையலாம். இந்த மூன்று நாடுகளிலும் ஒரு சில பிரதிநிதிகள் கொண்ட சபைதான் நன்கு விவாதித்த ஒரு திட்டத்தை தயாரித்திருக்கிறது. அந்தத் திட்டம் அமுலுக்கு வருவதில் கஷ்டங்கள் இருந்தபோதிலும் ஒத்துழைக்க மறுக்கும் அல்லது இறுதியில் ஏற்கப்பட்ட திட்டத்தை எதிர்க்கும் பொது ஜன அபிப்ராயம் ஏதுவும் திரண்டு இல்லை.

பிரதிநிதிகள் அடங்கிய இதைப்போல சபையில், மெம்பர்கள் ஒருவரை யொருவர் நன்கு புரிந்து கொள்கிறார்கள்; இன்னொரு கக்ஷியின் முக்கிய வாதங்களை உணர்கிறார்கள்; தங்களுடைய சொந்த பலவீனங்களையும் தெரிந்து கொள்கிறார்கள். ஒருவருடைய அறிவும் இன்னொருவருடைய அறிவுடன் கலப்பதால் பலன் கிடைக்கிறது; கொஞ்ச நேரம் கழித்து—இதைப்போல பேச்சுகளில் கலந்து கொண்டவர்களின் அநுபவம் இது தான்—கூட்டு அறிவு ஒன்று உதயமாகிறது. அதிலிருந்து ஒரு பொது உறுதி இல்லாவிட்டாலும் பலன் கிடைக்கவேண்டுமென்ற ஒரு விருப்பமாவது உண்டாகிறது.

பிரான்சு ஜெர்மனி ரஷ்யா ஆகியநாடுகளின் அரசியமைப்பு சரித்திரத்திலிருந்தும், மறுபக்கத்தில் கானடா, ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளின் அரசியலமைப்பு சரித்திரத்திலிருந்தும் நாம் பல பாடங்களை கற்றுக்கொள்ள வேண்டி யிருக்கிறது. முதலாவதாக அரசியலமைப்பை தயாரிப்பதால் நிச்சயம் ஒப்பந்தம் ஏற்பட்டு விடுமென நினைக்க முடியாது; இரண்டாவதாக நேருக்கு நேர் தொடர்பில்லாமல் எப்பேர்ப்பட்ட ஒப்பந்தமும் ஏற்பட முடியாது, தூரத்திலிருந்து சர்ச்சை செய்வதால் ஒப்பந்தம் ஏற்படாதென்பதை நான் சொல்லத் தேவையில்லை. மூன்றாவதாக அரசியலமைப்பை தயாரிப்பது கஷ்டமான விவகாரமாகும். நிரந்திர பலன்கள் கிடைக்க வேண்டுமானால் அளவுகடந்து சிரமப்பட வேண்டும், மிக்க பொறுமையுடனிருக்க வேண்டும்.

"நான் சொல்லும் ஒப்பந்தம், ஒரு கக்ஷி இன்னொரு கக்ஷியின் கோரிக்கைகள் அனைத்துக்கும் இணங்குவதின் மூலம் ஏற்படக் கூடியதல்ல; ஒவ்வொரு கக்ஷியும் தனது இஷ்டப்படி வியாக்யானம் செய்து கொள்ளக் கூடிய வழா வழா திட்டம் கொண்ட, சர்வ சாதாரணமாக நடக்கும் சமரசமுமல்ல. ஹிருதய இணைப்பு, பரஸ்பர நம்பிக்கை, பிரத்யக்ஷமாயுள்ளவைகள் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்ட ஒப்பந்தம் வேண்டுமென்கிறேன். இவற்றை அஸ்திவாரமாகக் கொண்டுதான் பெரிய வல்லரசுகளை ஸ்தாபிக்க முடியும். இந்திய சர்க்காரின் தனிரகமான அல்லது சிக்கலான பிரச்னைகளைத் தீர்க்க புதிய முறையோ அல்லது பழைய தத்துவங்களை புதிய ரீதியில் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருவதோ அவசியமாயிருக்கலாம். இதைப்பற்றி திட்டமாக எனக்கு ஒன்றும் தெரியாது. இது விஷயத்தில் ஒரு முடிவுக்கு வரவேண்டிய பொறுப்பை என்னைவிட அறிவு படைத்தவர்களுக்கு விட்டுவிடுகிறேன். பார்த்த மாத்திரத்திலேயே ஏதாவது ஒரு யோசனையை ஏன் நாம் நிராகரிக்க வேண்டும்? அல்லது சர்வத்திற்கும் பரிகாரம் என்று ஏன் நாம் பிடிவாதமாயிருக்க வேண்டும்? கடவுள் சாட்சியாக, எல்லா யோசனைகளும் பரிசீலனை செய்யப்பட்டு விவாதிக்கப் படட்டும். அபிப்பிராய பேதத்தை இன்னும் வளர விட்டுக்கொண்டிருப்பதா? நோக்கங்கள் மீது எப்பொழுதும் சந்தேகங்கொண்டிருப்பதா?"

REG NO. M. 3888 | 12 PAGES | PRICE 1 ANNA



# ஊழியன்



## The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 19 | KARAIKUDI, 28TH DECEMBER 1939, THURSDAY | NO. 26

## சப்மரீனைப்பற்றிச் சகலமும்

(1-பக்கத் தொடர்ச்சி)

வைக்கப்பட்டுள்ளன. ஒரு டார்பிடோ 60 மைல் வேகத்தில் ஓடும். டார்பிடோவின் முன்புற ஊசி ஒரு மீன் மீது பட்டுவிட்டாற்கூட அது வெடித்து விடுமாகையால், டார்பிடோ கிளம்பிய இடத்திலேயே, அங்கு ஒரு மரத் துண்டு அல்லது உடைந்த கப்பலின் பாகத்தின் மீது பட்டு வெடித்து, அது எதிலிருந்து கிளம்பிற்றோ அந்த சப்மரீனையே உடைத்துவிடக் கூடும். இதைத் தடுப்பதற்காக, டார்பிடோவில் ஒரு விசிறியை வைத்து, அவ் விசிறி சுற்றி நின்றதுமே வெடிக்கிறாற்போல ஒரு சூட்சுமம் செய்திருக்கிறார்கள்.

டார்பிடோ எதன் மீதும் மோதாமல் தவறிவிட்டால், அதன் பெட்ரோல் செலவழிந்து, அதன் இயந்திரம் நின்று, அதிலுள்ள வால்வ் திறக்கப்பட்டு, தண்ணீர் நிரம்பி, நீருக்குள் அமிழ்ந்திவிடும். ஒரு டார்பிடோ 8000 பவுன் ஆகும்; எதிரிகள் கைக்குப் போகாதிருக்கவே இப்படி மூழ்கடிக்கப்படுகின்றது. என்றாலும் 8000 பவுன் செலவழித்து உபயோகப்படாமற் போவதைச் சகிக்கமுடியுமா? டார்பிடோ எதையாவது தாக்காமல் தவறிவிட்டால், அது மீண்டும் கிளம்பின இடத்துக்கே திரும்பிவந்து விடுகிறாற்போல ஓர் உபாயம் செய்து கொண்டிருக்கிறார்களாம்!

சப்மரின் தண்ணீருக்குள் மூழ்கியிருந்தால், மணிக்கு 12 மைல் வேகத்தில் 100 மைல் வரையில்தான் பிரயாணம் செய்யலாமென்று சொன்னோமல்லவா? அதாவது சப்மரின் தண்ணீருக்குள் போய்க்கொண்டேயிருந்தால் சுமார் 8 அல்லது 9 மணி நேரம் போகலாம். ஆனால் தண்ணீருக்குள் மறைந்து அசையாமல் நிற்பதாயிருந்தால் 3 நாட்களுக்கு வேண்டிய பிராணவாயுவைத்தான் அடக்கிவைத்துக் கொள்ளமுடியும்.

ஒரு சப்மரினில் 15 முதல் 30 பேர் வரையில் இருப்பார்கள். ஆபத்துக் காலங்களில் தப்பியோடுவதற்கு வழிகளும் மிதப்புக் கருவிகளும் வைத்திருப்பார்கள்.

ஒரு சப்மாரின் ஒரே சமயத்தில் 5 அல்லது 6 டார்பிடோ போடலாம்.

சப்மரின் சமுத்திரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தபோதிலும், அதைச் சேர்ந்த மற்றொரு மாலுமிகளின் கூட்டம் தயாராகக் கரையில் இருந்த வண்ணமிருக்கும். சப்மரின்களுக்கு அடிக்கடி பெட்ரோல் அல்லது ஏதாவது ஒரு சாமான் வேண்டியதாயிருக்கும். ஆகவே, சப்மரின் ஒரு மாதத்துக்குள் 2 முறையாவது சாதாரணமாய்க் கடற் கரைக்கு வரும்.

நீர்மட்டத்தில் செல்லுவதாயிருந்தாலும் ஒரு சப்மாரின் 8000 மைல் தூரம்தான் போகலாம். அதாவது 4000 மைல் போய்விட்டு 4000 மைல் திரும்பக்கூடிய எண்ணெயும் உணவுப் பொருள்களும், குடி தண்ணீரும் அதன் வசமிருக்கும். ஆகையால் சப்மாரின்களுக்குத் துணையாய் 'டெப்போ' என்று ஒருவிதக் கப்பல்களை வைத்திருப்பார்கள்.

### டிப்போ அல்லது டெப்போ!

டெப்போ கப்பல்கள், சப்மாரின்களுக்கு ஆட்களோ எண்ணெயோ, உணவோ, சாமானோ சப்ளை செய்வதற்காக ஆங்காங்கு வைக்கப்பட்டுள்ள கப்பல்களாகும். எனவே ஒரு சப்மாரின் 5000 மைல் தூரம் போய் ஒரு கப்பலை அல்லது ஒரு துறைமுகத்தைத் தாக்கவேண்டுமானால், 4000 மைல் தூரத்துக்குள்ளேயே, அதாவது சுமார் 3000 மைல் தூரத்தில் ஒரு டெப்போ கப்பலிருக்கும். இப்படி 3000 மைலுக்கு ஒன்றாய் டெப்போ நிறுத்தப்பட்டு ஒரு ஸ்டேஷன்போல உதவிபுரியும். இவை தோற்றத்தில் சாதாரண வர்த்தகக் கப்பல்கள் போல் இருக்கும். ஆகையால் வித்தியாசம் தெரியாது. டெப்போ ஒன்றைப் பார்த்துவிட்டால் அதன் சுற்று வட்டாரத்தில் சப்மாரின் உலாவுகிறதென்று அர்த்தம்!

சிறு சப்மாரின்கள் சஞ்சரித்தால் 500 மைல் தூரத்துக்கு ஒரு டெப்போ கப்பலிருக்கும்.



## சினிமாச் செய்திகள்

பர்மிய சர்க்கார் சினிமாத் தொழில் நடத்த முற்பட்டிருக்கிறது. பர்மாக் கவர்னர் இதற்கு அனுமதி தந்திருக்கிறார்.

*

சிறுவர்களுக்கும் வயது முதிர்ந்தவர்களுக்கும் கல்விப் பயிற்சி அளிப்பதற்காகவே அந்த 'ஸ்டேட் சினிமா சர்வீஸ்' பயன்படும்.

*

ட்ரினிடி கம்பெனியாரின் சந்திரகுப்த சாணக்கியா என்ற தமிழ்ப் படம் கிட்டத்தட்ட முடிந்துவிட்டது.

*

மன்மத ராய் எழுதியுள்ள உசாஷி அல்லது விழுகிற நட்சத்திரம் எனும் படத்தை தேவகி போஸ் அடுத்தபடியாய்ப் படமெடுக்கப் போகிறார். கதையை ரூ 1500க்கு வாங்கியிருக்கிறார்.

*

சோபன சமர்த், இந்திய ஆர்ட்டிஸ்ட்ஸ் கம்பெனியாரின் பௌரானி படத்தில் நடிக்கப் போகிறார்.

*

நியூ தியேட்டர்ஸ் கம்பெனியார் தமது சிக்கன முறைத் திட்டத்தைப் பூர்த்தி செய்துவிட்டனர். டைரக்டர் நிதின் போஸ், தம் சம்பளத்தில் 100க்கு 50 குறைத்துக் கொள்ளத் தாமாகவே முன் வந்திருக்கிறார். மற்றுமுள்ள நடிகர் ஆகியோரும் சம்பளத்தைக் குறைத்துக்கொள்ள ஒப்புக் கொண்டுள்ளனர்.

*

மள்ளிப்பெள்ளி தெலுங்குப் படம் முடிந்துவிட்டதால், டைரக்டர் ஒய். வி. ராவ் அடுத்தபடியாக மஞ்சு கோஷா என்ற படத்தை எடுக்கப் போகிறார்.

*

புனாவில் நவயுக சித்திரபாட் என்று ஒரு புதிய சினிமாக் கம்பெனியை பாபு ராவ் பெந்தார்காரும் பி. கே. அத்தேரும் ஆரம்பித்திருக்கின்றனர்.

அருண் கம்பெனியாரின் கோரக்நாத் என்ற படத்தில், பிரபல்யம் வாய்ந்த மகாராஷ்டிரப் பாடகராகிய ஸ்ரீமதி லீலா நடித்திருக்கிறார். இவர் பிரபாத் மாயா மச்சீந்திராவிலும், ஜலாதி நிஷானியிலும், ராஜா கோபிசந்திலும் பிரக்யாதி பெற்றார். அமர் ஜோதியில் நடித்த நந்திரேக்கரும் இதில் நடித்துள்ளார்.

*

மிஸ் ரோஸ் நேஷனல் ஸ்டுடியோவில் சேர்ந்துவிட்டார். சன்ஸ்கார் படத்தில் பிரதம நடிகையாக நடிக்கப் போகிறார்.

*

சன்ஸ்கார் படத்தின் கதை மிக ருசிகரமானதாயிருக்கும். ஏனெனில் பெண்களுடைய சுபாபவங்களைக் காட்டும் 7 பெண்கள் இதில் நடிக்கின்றனர். கிராமப் பெண்களின் நடவடிக்கைகளும் நாகரீகப் பெண்ணின் செயல்களும் மிக வேடிக்கையாய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

*

## சோறுகூட போட மாட்டார்கள்

### பணம் கொடுத்தாலும் சரி

### ஆங்கிலேயர் போக்கு

பாபு ராவ் படேல் சமீபத்தில் இங்கிலாந்துக்குப் போய் விட்டு வந்தார். அவர் லண்டனைப் பற்றிச் சொல்லும்போது, "எல்லாம் சரி. ஆனால் நம்மை ஆளும் இங்கிலாந்தின் பிரதானப்பட்டினமாகிய லண்டனில், நான் உணவருந்துவதற்காக ஹோட்டல் ஹோட்டலாய் 26 ஹோட்டல்களில் சுற்றியலைந்தேன். நான் இந்தியன் என்ற காரணத்தால் அந்த 26 ஹோட்டல்களிலும் எனக்கு உணவு விற்க மறுத்துவிட்டார்கள்"

"இங்கிலீஷ் காரர்களுடைய மனைவி மக்கள் மீது குண்டுகளை வீசும் ஜர்மானியருக்கு லண்டனிலே எல்லா உரிமைகளுமுண்டு. ஆனால் நம் பொருள்களை வாரிக்கொண்டுபோய்த் தின்று கொழுக்கும் அவர்கள் நம்மை இழிவாய் நடத்துகிறார்கள். நிறவெறிதான் உலகத்தை யாளுகிறது" என்று வயிறெரிந்து கூறினர்.

*

ஜவானி-கி-ரீத் என்ற படத்தில் கணன் பாலா அநிதா வேடத்தில், இந்தியப் பெண் மேல்நாட்டு நாகரிகத் தோற்றத்தில் காட்சியளித்தாலும் அவளுடைய கற்புச் சிறப்பு குன்றாதென்று காட்டியிருக்கிறார்.

Edited, Printed and Published by Raya Chockalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi,

